# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...



தனிமையா... தனித்துவமா?

KALKI • 12.04.2009 • ரூ.10.00 • 96 பக்கங்கள்

'கலகல' ஸ்பெஷல்!

ஹாலிவுட் வாங்கிய கதை!



தேடல் தேவதை!



## எதிர்பார்ப்பு

மரபின் மைந்தன்

முத்தையா

பரவச எழுத்தில்...



# சிவாஜி த சுப்ரீம் பாஸ்

## எதிரொலி



கல்கி

# 70 முதல் 7 வரை

(இரண்டாம் பாகம்)



கல்கி ராஜேந்திரன்

அனுபவ வார்த்தைகள்

## ஏகாந்தம்

# தீராத விளையாட்டு விட்டலன்



அருண் சரண்யா

பக்தி பயணத்தொடர்

• அதிரடி • அமர்க்களம் • ஆரம்பம்



## எச்சரிக்கை

அமிர்தம் சூர்யாவின்

வாழ்வியல் தொடர்...

# தவணை முறை தற்கொலை!



கம்பன் வழிபாடு

'கம்பனடிப்பொடி' சா.கணேசன்



'கம்பனடிப்பொடி' சா.கணேசன் நூற்றாண்டு விழா, ஏப்ரல் 5ம் தேதி காரைக்குடியில் நடைபெறுகிறது. அவரைக் குறித்த நினைவுகள் சில....

# கண்ணதாசனைத் துரத்தி

பல இடங்களிலும், சில அயல்நாடுகளிலும் கூட கம்பன் கழகங்கள் தொடங்கப்பட்ட போது நூற்றியொரு ரூபாய் பணமும் ஒரு கம்பராமாயணப் புத்தகத் தொகுதியும் 'தாய் வீட்டுச் சீதனமாக' அனுப்பினாராம் கம்பனடிப்பொடி!

கம்பன் விழாவின் ஒவ்வொரு நிகழ்ச்சியையும் மிகுந்த ஆர்வத்தோடும் கவனத்தோடும் அமைத்தவர் சா.கணேசன். கம்பனைப் புரட்டிப் புரட்டி அலசி ஆராய்ந்து புதுப்புதுத் தலைப்புகளில் பேச்சாளர்களுக்கும் கவிஞர்களுக்கும் பேச வாய்ப்பளித்து, அவர்கள் புலமையையும் ஆற்றலையும் வளர்த்தார். பேச்சாளர்களுள் பலருக்கு வெற்றிலை போடும் பழக்கம் உண்டு. அதற்காக பிரத்யேகமாகத் தயாரித்த மரப்பெட்டியில் (இலக்கியத்தில் இதற்கு அடைப்பம் என்று பெயர்) வெற்றிலை பாக்கு, சுண்ணாம்பு, வாசனை திரவியங்கள் என்று நிரப்பி மேடையில் வைத்திருப்பார்!

ஆழ்வார்களில் ஒரு 'தொண்டரடிப் பொடி'யைப் போல இலக்கிய உலகில் இவர் 'கம்பன் அடிப் பொடி' என்று நீதியரசர் எஸ்.மகராஜன் இவருக்குப் பெயர் சூட்டினார். அந்த அளவுக்கு கம்பன் மீது பக்தி கொண்டிருந்தார் சா.கணேசன்! பங்குனி மாதம் ஹஸ்த நட்சத்திரத்தன்று கம்பன் தன் இராம காதையை அரங்கேற்றினான் என்று தனிப்பாடல் ஒன்று தெரிவிக்கிறது. இதைச் சான்றாக வைத்து, காரைக்குடியில் ஒவ்வொரு ஆண்டும் அந்த தினத்தையொட்டி நான்கு நாட்கள் கம்பனுக்கு விழா எடுத்து நடத்தி வந்தார் சா.கணேசன். 1939ம் ஆண்டில் நடைபெற்ற முதல் கம்பன் விழாவுக்குத் தலைமை ரசிகமணி டி.கே.சி. தமிழ் நாட்டில் யார் வந்தாலும் வராவிட்டாலும், குறித்த நேரத்தில் 'கம்பன் வாழ்க... கம்பன் புகழ் வாழ்க... கன்னித் தமிழ் வாழ்க...' என்று நீண்ட முழக்கத்துடன் விழாவைத் தொடங்கி விடுவார்.

கவியரசர் கண்ணதாசன் எந்த நிகழ்ச்சிக்கும் நேரத்துக்குப் போனதில்லையாம். ஆனால், காரைக்குடி கம்பன் விழா என்றால் அடித்துப் பிடித்துக் கொண்டு நேரத்துக்கு வந்து விடுவாராம். இதை அவரே ஒரு கவியரங்கில்,

''கடிகாரம் பார்த்துத்தான் காரியங்கள்
செய்வதென
பிடிவாதம் கொண்டிருக்கும்
பேரவையின் தலைவர்களே!

கடிகாரம் என் பகைவன்! காலந்தை நான் அறிந்து
கடுகி இங்கே ஓடிவந்தேன் கணேசர்
பயத்தினால்''

என்று வேடிக்கையாகக் குறிப்பிட்டாராம்!

ரசனைக் குறைவாகவோ கண்ணியக் குறைவாகவோ யாரும் கம்பன் விழாக்களில் பேசிவிட முடியாது. தயங்காமல் மேடையை விட்டு இறக்கி விடுவார் கம்பனடிப்பொடி!

இலக்கியம், ஆன்மிகம், சிற்பம், சாஸ்திரம், கலை, கல்வெட்டு தொல்பொருள் ஆய்வு, அரசியல் என்று எல்லாத்துறைகளிலும் வல்லவர். அவர் வடிவமைத்த தமிழ்த்தாய் கோயில், மொழிக்காக எடுக்கப்பட்ட ஒரே தனிக் கோயில். உலகில் வேறு எங்கும் இது போலக் காண முடியாது!

சுதந்திரப் போராட்ட வீரர்; இராஜாஜியின் சீடர். தனி நபர் சத்தியாகிரகத்தின் போது சிறைப்பட்டவர். ஆங்கிலப் போலீஸ் அதிகாரி முன் சட்டையைக் கிழித்து மார்பைக் காட்டி, தம்மைச் சுடுமாறு சவால் விட்ட தீரர்! அன்று முதல் தம் வாழ்நாளில் சட்டையே அணியாது விரதம் பூண்டவர். கம்பராமாயணத்தின் எளிமையான பதிப்பான மர்ரே எஸ் ராஜம் பதிப்பு வெளிவர மூல காரணம் இவரே.

1966ல் நடந்த போரின்போது காரைக்குடி கம்பன் விழாவுக்காக சேர்த்து வைத்திருந்த நிதியை எல்லாம் யுத்த நிதிக்காக வழங்கிவிட்டு, எளிமையான முறையில் கம்பன் விழாவை நடத்திக் காட்டிய பழுத்த தேசியவாதி.

## ...ணேசர் பயம்!

1982ம் ஆண்டு, சென்னைக் கம்பன் விழாவில் கம்பனடிப்பொடி அவர்களைத் தலைவராகக் கொண்டு, அழைப்பிதழ்கள் அச்சாகி அனுப்பிவிட்ட நிலையில் கம்பனடிப்பொடியைக் கம்பன் ஆட்கொண்டு விட்டான்! விழாவில் அவர் விட்டுச் சென்ற வெற்றிடத்தை நிரப்ப, படாதபாடு படவேண்டியதாயிற்று!

மேல் துண்டை இடுப்பில் கட்டிக் கொண்டு, சிறு சந்தனப் பொட்டு நெற்றியில் துலங்க ''கம்பன் வாழ்க...'' என்று தமக்கே உரிய கம்பீரமான குரலில் இந்த மகத்தான மனிதர் முழங்குவது இன்று வரை காதில் ஒலித்துக் கொண்டிருக்கிறது!

**- த.கி.நீலகண்டன்**




**கல்கி**

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் : **சீதா ரவி**

உதவி ஆசிரியர் : **கதிர்பாரதி**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன்,**
**ச.கார்த்திகேயன், பா.கோபால்**

தொலைபேசி :
044 - 4343 8888 (30 lines)

தொலைநகல் : 044 - 4343 8899

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com

விளம்பரப் பிரிவு :
marketing@kalkiweekly.com

சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com

பிற தகவல்கள் :
info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு :
ஒரு வருடம் : ரூ. 500/-
ஆறு மாதம் : ரூ. 270/-

வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : ரூ.3,800/-

**Bharathan Publications**
**Private Limited.**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

# கிரேஸியைக் கேளுங்கள்

## WWW

## 'மவுசிக' வாகனர் பிள்ளையார், 'மெயில்' வாகனர் முருகர், 'பதி' net படி ஐயப்பன்..

● அ.ராஜா ரஹ்மான், கம்பம்

*எது ரகசியம்? எது பரம ரகசியம்?*

திருக்கோஷ்டியூர் நம்பி ஸ்ரீ ராமானுஜருக்கு உபதேசித்த அஷ்டாக்ஷர மந்திரம் 'ரகசியம்'. 'இதை நீ ஜபித்தால் வைகுந்தம் செல்வாய். வேறு எவருக்கேனும் இதைக் கூறினால் அவர்கள் தான் வைகுந்தம் செல்வார்கள். ஆனால், கூறிய நீயோ நரகம் செல்வாய்' என்ற கண்டிஷனையும் போட்டார். நலம் தரும் சொல்லை நாம் மட்டும் கூறினால் அது சுய நலம் தரும் சொல்லாகி விடுமே என்ற தியாக உணர்வு கொண்ட பெரும்பூதூர் மாமுனி ஸ்ரீ ராமானுஜர், கோயில் மதில் மேல் ஏறி அனைவருக்கும் அந்த ரகசியத்தை அப்பட்டமாக்கினார். தாம் நரகம் போனாலும் பரவாயில்லை. தம்மை நம்பிய அடியார்கள் வைகுந்தம்... அதாவது பரம பதத்துக்குப் போக வழி செய்து ரகசியத்தைப் 'பரம(பத)ரகசிய'மாக்கினார்.



● வாசுதேவன், அயிரோலி

*அதியமான் ஔவை யாருக்கு அளித்த அதிசய நெல்லிக் கனி தங்களுக்குக் கிடைத்தால் யாருக்குக் கொடுப்பீர்கள்...?*

அதை என் மனைவியின் உள்ளங்கை நெல்லிக் கனியாக வைத்து ஊறுகாய் போட்டு 'ஆத்திச் சூடியில்' ஸாரி 'ஆத்து ஜாடியில்' வைக்கச் சொல்லுவேன். அந்த அதிசய நெல்லிக்கனியைச் சாப்பிட்டால் நீண்ட நாள் இருக்கலாம். இருந்து சாதிக்க நானும் அதியமானில்லை, என் மனைவியும் ஔவையார் இல்லை. அட்லீஸ்ட் அந்த நெல்லிக்கனியாவது ஜாடியில் ஊறுகாயாக நீண்ட நாள் இருந்து விட்டுப் போகட்டுமே!

● ஆர். கோபாலன், மேற்கு மாம்பலம்.

*ஸ்வாமி, ஒரு சின்ன சம்சயம். ஆண்களை 'பொம்மை' மாதிரி ஆட்டி வைக்கிறார்கள் என்பதால் தான், பெண்கள் 'பொம்மனாட்டி' என்று அழைக்கப்படுகிறார்கள். சரியா?*

ஏன் ஓய், அப்ப கம்பியா ஆட்டிப் படைச்சா 'கம்மினாட்டி' என்பிரா! நீர் 'ரொம்ப நாட்டி'ங்க காணும்.

● அ.யாழினி பர்வதம், சென்னை.

*தெரியாத்தனமாக நீங்கள் தேர்தலில் போட்டியிடும் சூழல் ஏற்பட்டால், எந்தச் சின்னம் கேட்டுப் பெறுவீர்கள்...?*

உதயசூரியனைக் கண்ட சந்தோஷத்தில் மலர்ந்த தாமரையை தண்ணீர் ஒட்டாத இரட்டை இலையோடு சேர்த்துப் பட்டும் படாமல் பறிக்கும் கை. இந்தச் சின்னத்தைச் சுவரில் வரைந்து முடிப்பதற்குள் எலெக்ஷன் முடிந்து விடும்.

● சிவகாமி, நெல்லை.

*கடவுள் கம்ப்யூட்டர் வைத்திருப்*

பாரா...?

மத்த கடவுளைப் பத்தித் தெரியாது. மவுசிக-வாகனர் பிள்ளையார், மெயில்-வாகனர் முருகர், பதிNetடு படி ஐயப்பன், இந்த மூவரிடமும் நிச்சயம் இருக்கும். www.கடவுள்.comல் பார்த்தேன்.

● **பிரசன்னா, மதுரை**

***'சிக்'கென்ற அழகியைப் பார்த்தால் உங்களுக்கு முதலில் வருவது, கதையா, கவிதையா, வசனமா...?***

செம்ம 'கட்டுரை'...!

● **எம்.மிக்கேல்ராஜ், விருதுநகர்**

***மருந்துக்காவது அசைவம் சேர்த்துக் கொள்வீர்களா...?***

அந்த திருவான்மியூர் மருந்தீஸ்வரரே வற்புறுத்தினாலும் நான் அசைவ மாட்டேன்...!

● **எம். அசோக்ராஜா, திருச்சி**

***எது நாகரிகம்..? எது அநாகரிகம்...?***

கொடுக்க மனமில்லாவிட்டாலும் பிச்சை கேட்டவனிடம் 'ஸாரி இல்லப்பா' என்று நாசூக்காக நழுவுவது நாகரிகம். 'கல்லு மாதிரி உடம்பை வைச்கண்டு உழைச்சு சம்பாதிக்காம இப்படிப் பிச்சை எடுக்கறியே... ஒனக்கு வெக்கமாயில்ல' என்ற அதிகப்பிரசங்கித்தனம் அநாகரிகம்.

# கடவுள்.com



**செம 'கட்டுரை'யாயிருந்தாலும் நாங்க உங்களைத் தான் கட்டி வைக்கிறோம்!**

● **லலிதா செல்லப்பா, பம்மல்**

***நீங்க ஏன் மெகா-சீரியலுக்கு எழுதக் கூடாது...?***

'முடியாத' காரியத்தை நான் முயற்சி செய்வதில்லை.

● **வி.பி.கே. சரவணன், சின்னமனூர்**

***வாழ்க்கை தென்றலா? புயலா...?***

மனக் கதவைத் திறந்து வைத்தால் தென்றல். கதவை மூடிக் கவலையில் மையம் கொண்டால் புயல்.

● **த. சத்தியநாராயணன், அயன்புரம்**

***உங்களுக்கும் மனைவிக்கும் நடக்கும் சண்டையில் யார் ஜெயிப்பார்கள்...?***

ஆரம்பத்தில் அவள் ஜெயிப்பாள். முடிவில் நான் தோற்பேன். நடுவில் அக்கம் பக்கம் வேடிக்கை பார்க்கும் விளம்பர இடைவேளை.

# மிரட்டும் சாதிகள்

2001 சட்டமன்றத் தேர்தலில் தி.மு.க.வின் கூட்டணி கட்சிகளாக, விடுதலைச் சிறுத்தைகள், புதிய தமிழகம், மக்கள் தமிழ் தேசம், புதிய நீதிக் கட்சி... ஆகியவை போட்டியிட்டன. இவை அனைத்தும் வெவ்வேறு ஜாதிகளைப் பின்னணியாகக் கொண்ட கட்சிகள். ஜாதி பேதமற்ற சமுதாயம் அமைய வேண்டுமென்ற லட்சியத்துடன் புறப்பட்ட தி.மு.க., ஜாதியக் கட்சிகளை கூட்டணிக் கட்சிகளாகச் சேர்த்துக்கொண்டதைக் கண்டு எரிச்சலடைந்தார் முரசொலிமாறன். அப்போது நடந்த ஒரு பொதுக்குழுவில்



* கரிக்கோல்ராஜா



* இசக்கிமுத்து



* சி.என்.ராமமூர்த்தி



* ஈஸ்வரன்

பேசும்போது, "அறிவாலயத்துக்கு முன்பு ஆட்டோவில் மைக் கட்டிக்கொண்டு ஏதாவது சாதிச் சங்கம் ஊர்வலம் போனால், அதன் தலைவரை உள்ளே கூப்பிட்டு ஸீட் கொடுக்கும் அவல நிலைக்கு தி.மு.க. தள்ளப்பட்டிருப்பது கவலைக்குரியது" என்று கண்டனம் தெரிவித்தார். இத்தனை ஜாதிக் கட்சிகள் தி.மு.க.வை ஆதரித்தும் அந்தத் தேர்தலில் அக்கட்சி ஆட்சியைப் பறிகொடுத்தது. ஜாதியக் கட்சிகளிலிருந்து சிறுத்தைகளைத் தவிர வேறு ஒருவரும் வெற்றி பெறவில்லை.

சமீபத்தில் கொங்குவேளாளக் கவுண டர் பேரவை மாநாடு நடத்தி அசத்தியது. பல தலைவர்களைச் சந்தித்தார்கள் அதன் நிர்வாகிகள். இப்போது தனியாகப் போட்டி யிடுவதென்று தீர்மானித்து வேட்பா ளர்களை நிறுத்தியுள்ளார்கள். கொங்கு மண்டலத்தில் அ.இ.அ.தி.மு.க. சற்று செல்வாக்கோடு இருப்பதால், இந்த அமைப்பை ஆளும் கட்சி இயக்குவதாக அ.இ.அ.தி.மு.க.வினர் சொல்கிறார்கள்.

"எங்களைப் போன்ற அமைப்பு களைப் பார்த்து அரசியல் கட்சிகள் பயப் படுகின்றன என்பது உண்மைதான். ராம தாஸைக் கூட்டணியில் சேர்த்துக்கொள்ள

* "பிராமணரல்லாதோரை ஒருமுகப் படுத்தும்விதமாக தி.மு.க. என்ற அரசியல் கட்சி வளர்ந்தது. ஆனால், அந்தந்த ஜாதிகள் சமூக பொருளாதார ஏற்றம் கண்டபோது, தங்களைத் தாங்களே பாதுகாத்துக் கொள்வதற்காக தனித்தனியே சங்கங்களைத் தொடங்கினார்கள்.

* இச் சங்கங்கள், ஆதாயத்துக்காக, தங்கள் சமுதாயத்தினரின் எண்ணிக்கையைக் கூட்டிச் சொல்வது வழக்கமாகிவிட்டது.

தி.மு.க.வும், அ.இ.அ.தி.மு.க.வும் போட்டி போட்டது ஏன்? அதன் ஜாதிப் பின்னணி தானே. எங்கள் ஜாதியை மிகவும் பிற்பட்டோர் பட்டியலில் சேர்க்க வேண்டும் என்பது எங்கள் முக்கியக் கோரிக்கை'' என்கிறார் இந்த அமைப்பின் பொதுச் செயலாளரான ஈஸ்வரன்.




முதலில் தங்கள் மக்களின் சமூக பொருளாதாரத்தை உயர்த்துவதற்காக

# விரட்டும் கட்சிகள்!

## - எலெக்ஷன் பின்னணி



தோன்றுகின்றன ஜாதிச் சங்கங்கள். அப்படித் தோன்றியதுதான் நாடார் மகாஜன சங்கம். மதுரையிலிருந்து செயல்படும் இது, நாடார்களின் முக்கியமான அமைப்பு. ''அரசியல் கட்சிகள் எங்கள் சமுதாயத்தை உதாசீனப்படுத்துகின்றன. தேர்தல் நெருங்கும்போது எங்களை அழைத்து ஃபோட்டோ எடுத்து ஆதரவு தெரிவிப்பார்கள். அதன் பிறகு எங்களை மறந்துவிடுவார்கள். நாங்கள் ஏதாவது கல்லூரி துவங்க வேண்டுமென்று போனால், மற்றவர்களைப் போல 'கொடுக்க வேண்டியதைக் கொடுங்கள்' என்று வாங்கிவிடுகிறார்கள். 2011ல் சட்டமன்றத் தேர்தலில் நாங்கள் போட்டியிடுவோம்'' என்கிறார் இதன் பொதுச்செயலாளர் கரிக்கோல்ராஜா.

* ஜாதி சங்கங்களின் பின்னணியில் வலிமையும் பொருளும் சேர்த்துக்கொண்டு கல்லூரி ஆரம்பிப்பது, சாராய ஆலை நடத்துவது போன்றவையும் நிகழ்கின்றன.
* சலுகைகள் பெறுவதற்காக, மிகவும் பிற்படுத்தப்பட்டோர் பட்டியலுக்கு மாற போராடுவதும் நிகழ்கிறது.
* ஜாதி சங்கங்கள் நேரடியாகத் தேர்தலில் போட்டிபோட முடியாது என்பதால் முகமூடியாக ஓர் அரசியல் கட்சி துவங்கு

## ஓரிக்கையில் மஹோத்ஸவம்

ஞானமும் கருணையும் நிறைந்த பரிபூரண அருள் வெள்ளமாகத் திகழ்ந்தவர் காஞ்சி ஸ்ரீ மஹா பெரியவர்.

29.4.2009 முதல் 10.5.2009 வரையில் 12 நாட்களுக்கு அதிருத்ர, ஸஹஸ்ரசண்டி பாராயணம் மற்றும் ஹோமமாக நடைபெறுகிறது ஸ்ரீ பெரியவரின் ஜயந்தி உற்சவம்!

காஞ்சிபுரத்தை அடுத்துள்ள ஓரிக்கை என்னுமிடத்தில் அமையவுள்ள ஸ்ரீ மஹாபெரியவர் திருக்கோயில் வளாகத்திலும், பங்காரு அம்மன் தோட்டம் மீளா அடிமையின் இல்லத்திலும் நடைபெறுகிறது இந்த விழா!

நடமாடும் சிவமென்று, வாழும் காலத்திலேயே வணங்கப் பட்ட ஸ்ரீ மஹா பெரியவரின் ஜயந்தி உற்சவத்தில், பங்கேற்பது வினை முடிச்சை வெட்டும் வழி! - ஞானமதி



சமீபத்தில் கள்ளக்குறிச்சியில் மாநாடு போட்டுக் கலக்கியவர்கள், பார்க்கவ குலத்தி னர். ''1971ல் எங்கள் குலத்தைச் சார்ந்தவர் கள் இருபது பேர் சட்டமன்ற உறுப்பினர் களாக இருந்தார்கள். இன்று நான்கு பேர் தான் இருக்கிறார்கள். அதிகாரத்தில் எங்களுக்கும் பங்களிப்பு இருக்க வேண்டு மென்பதற்காகப் போராடு கிறோம். கள்ளக்குறிச்சி யிலும் பெரம்பலூரிலும் பார்க்கவ குலத்தினரை வேட்பாளராகப் போட் டால், நாங்கள் ஆதரிப்ப தாக கலைஞரிடம் சொல்லியிருக்கிறோம்'' என்கிறார் இந்த அமைப் பின் முக்கியப் பிரமுகரான கோவைத்தம்பி.

1987ல் வன்னிய சங்கம் நடத்திய போராட்டத்தில் துப்பாக்கிச் சூட்டில் 28 பேர் உயிரிழந்தனர். ''வன்னியக்குல க்ஷத்திரிய சங்கம் 1881லேயே உரு வானது' என்கிறார், வன்னியர் சங்கத்தின் தொடக்ககால பொதுச்செயலாளரான சி.என்.ராமமூர்த்தி.

எங்கள் சங்கத்தின் துவக்க கால நட வடிக்கைகளில் எந்தவித ஆர்வமும் அக்கறையும் காட்டாத டாக்டர் ராமதாஸ், மிக தந்திரமாக இந்தச் சங்கத்தை அவரது அரசியல் ஏற்றத்துக்குப் பயன்படுத்திக் கொண்டது எங்கள் துரதிர்ஷ்டம்'' என்று குற்றம் சாட்டுகிறார் ராமமூர்த்தி. ''அரசியல் கட்சித் தலைவர்கள் ஜாதிச் சங்கங்ளைப் பார்த்துப் பயப்படுவதாக நடிப்பார்கள். அவர்கள் காரியம் முடிந்ததும் கை கழுவி விடுவார்கள்!'' என்கிறார் அவர்!

இன்றைய நிலையில், வன்னியர்கள் பல்வேறு கட்சிகளில் பிரிந்து கிடக்கிறார் கள் என்பதே உண்மை.

கின்றன, அல்லது ஏதேனும் ஒரு கட்சியுடன் 'ஒட்டி'க்கொள்கின்றன.

✱ மொத்தத்தில் ஜாதி உணர்வைத் தூண்டி வோட்டுக் கேட்கும் போக்குக்கு இச் சங்கங்களும் துணைபோகின்றன

முக்குலத்தோர்களின் நிலைப்பாடு தேர்தல் சமயத்தில் இங்கு அதிகமாகப் பேசப்படுகிறது! இச்சமூகத்துக்கு 65க்கும் மேற்பட்ட சங்கங்கள் இருக்கின்றன. இதில் முக்கியமானது டாக்டர் சேதுராமன் தலை மையில் இயங்கும் தேவர் பேரவை.

''சமூக நல்லிணக்கத்துக்காகப் பாடுபடுகிறது எங்கள் அமைப்பு. தேவர் சிலைகள் உடைபட்டால் தென் மாவட்டங்களில் மோதல் வரும். ஆனால், நாங்கள், உடைபட்ட தேவர் சிலைக்குப் பதிலாக வேறு சிலையை உடனே வைத்து டென்ஷனைத் தவிர்த்து விடுவோம். நாங்கள் அமைப்பு துவங்கிய பிறகு ஜாதி மோதல்கள் இல்லை. இட ஒதுக்கீடு குறித்து மட்டுமே நாங்கள் பேசுவதில்லை... தென் மாவட்ட வளர்ச்சி, மேற்கு நோக்கி பாயும் ஆறுகளைத் திருப்புவது போன்ற விஷயங்களையும் பேசுகிறோம்'' என்கிறார் இந்த அமைப்பின் பொருளாளரான இசக்கி முத்து.

**"ஜாதி சங்கங்கள், பொருளையும் வலிமையையும் சேர்த்துக்கொண்டு கல்லூரி ஆரம்பிப்பது, சாராய ஆலை நடத்துவது என காரியத்தில் இறங்குகின்றன"**

பிராமண சங்கங்களை ஒருங்கிணைக்கப் போவதாக எஸ்.வி.சேகர் அறிவித்திருக்கிறார். ஏழை பிராமணர்களுக்கு ஒதுக்கீடு கோரி வருகிறார்!

2001ல் ஆரணி தொகுதியில் முதலியார் இன வோட்டுகளை நம்பி போட்டியிட்டவர் ஏ.சி. சண்முகம். அவரை எதிர்த்து அ.இ.அ.தி.மு.க. சார்பில் போட்டியிட்டவர் மிக மிக மைனாரிட்டி சமூகத்தைச் சார்ந்த ராமச்சந்திரன். ஆனால், தேர்தலில் மண்ணைக் கவ்வியவர் ஏ.சி. சண்முகம் தான்! ஜாதியும் பணமும் உதவிக்கு வரவில்லை.

– ப்ரியன்

“என்ன ட்ரஸ் போட்டாலும் நல்லாவேயில்ல, எனக்கும் ஃபேஷனா அப் டு டேட்டா இருக்கணும்னு ஆசை. எந்தக் கடையில நீ அரிசி வாங்கறேன்னு என்னைப் பார்த்தாலே காலேஜ்ல பாடக் கௌம்பிடறாங்க. இந்த அழகுல எனக்கு ஸ்டைல் வேறயா, குண்டாயிருக்கறவங்க மாடர்ன் ட்ரஸ் போடவே கூடாதா?'' இப்படியெல்லாம் மருகும் பெண்ணா நீங்கள்? டோண்ட் வொர்ரி.

ப்ளஸ் சைஸ் என்பது சாதாரண விஷயமே. இன்னும் நம் நாட்டில் அவ்வளவாகப் புழக்கத்தில் வராதது. இங்கு XL அல்லது XXL லார்ஜ்... என அளவுகளுக்குப் பெயர். அதையும் கடைகளுக்குப் போய்க் கூச்சமில்லாமல் கந்திக் கேட்டு வாங்க எந்தப் பெண்ணுக்கும் துணிச்சலில்லை!

''லோ வாட், குண்டாயிருந்தா என்ன? நானும் மத்த பொண்ணுங்க மாதிரி ஃபேஷனா ட்ரஸ் போடுவேன், தாழ்வு மனப்பான்மைக்கு டாட்டா சொல்லிட்டேன்...'' என்று சொல்லத்தான் இந்த டிப்ஸ்...

★ மோனோக்ரோமில் உடை உடுத்தவும், என்ன புரியவில்லையா? ஒரே கலரில் முழு உடையும் இருக்குமாறு வாங்கவும். உடலின் அடர்த்தி பிறரின் கண்களுக்குத் தெரியாது என்கிறார்கள் ஃபேஷன் டிஸைனர்கள்.

★ லோ-ரைஸ் பாண்ட் போடக் கூடாது. ப்ளஸ் சைஸ் பெண்கள் இந்த வகை பாண்ட் போட்டால் வயிறு இடுப்புப் பகுதிகள் வெளியில் தெரியும். லோ, ஹைஹட் இட்!

★ பூட் கட் பாண்ட் போடவும். இவ்வகை பாண்டில் பாட்டம் பகுதியில் ஃப்ளேர் இருக்கும். உங்களை ஸ்லிம்மாகக் காண்பித்து ஒரு மாயையை உண்டாக்கும்.

★ டாப்ஸ் வாங்கும் போதும் கவனம் தேவை. ஷர்ட், டீஷர்ட், டாப்ஸ் எதுவாக இருந்தாலும் இடுப்பில் எலாஸ்டிக் இல்லாமல் வாங்கவும். லைக்ரா அல்லது ஸ்ட்ரெச் ஆகும்

# குண்டாயிருப்பவரும்



துணியினாலான டாப்ஸ் போடாதீர்கள். வயிற்றுப்பகுதி பளிச்சென கவனத்தை ஈர்க்கும்.

★ செங்குத்தான வரிகள் (வெர்டிக்கல் ஸ்டிரைப்) கொண்ட டிஸைனில் உடை போடவும்.

★ ஹைஹீல்ஸ் போடவும். உயரமாகத் தெரிந்தால் உடல் அகலம் அவ்வளவாகத் தெரியாது.

★ எப்போதுமே பெரிய சைஸ் ஹேண்ட்பாக் யூஸ்

பண்ணவும். குட்டியூண்டு பர்ஸ், மினி ஹேண்ட் பாக் உங்களுக்கல்ல.

★ டைட் ஃபிட்டாகப் போடக் கூடாது. அதற்காக தொளதொளவென்று மெகா சைஸ் உடையை மாட்டாதீர்கள்... கரெக்ட் சைஸில் உடை இருக்க வேண்டும்.

★ நல்ல பிரைட் கலரில் பெல்ட் போடவும். அகலமான, பெரிய சங்கி வகை பெல்ட் வாங்கி குஷியாகப் போட்டு வலம் வரவும்.

★ ப்ளாக் கலர் ட்ரஸ் கண்டிப்பாகப் போடவும். வார்ட்ரோபில் இடம்பிடிக்க வேண்டிய கலர். ஜீன்ஸ் பாண்ட் + வொயிட் ஷர்ட், பிரௌன் அல்லது ப்ளாக்கில் ஹைஹீல்ஸ் காலணி மாட்டினால் "ப்ளஸ் சைஸ் மேடம். ஆட்டோகிராஃப் ப்ளீஸ்" என்பார்கள்.

★ கண்ணாடிக்கெதிரே நின்று போஸ்சர் சரியாக இருக்கிறதா, கூன் போடாமல் ஜம்மென்று நிமிர்ந்து நிற்கிறோமா எனக் கவனமாக ஜட்ஜ் பண்ணுங்க. நிமிர்ந்து நின்றாலே வயிறு சற்றே உள்ளே போகும். கூடவே உயரமும் ஒரு இன்ச் கூடும். டபிள் பெனிஃபிட்!

# ஏஞ்சல்தான்!

## உடையழகு நடையழகு

★ முக்கியமான பாய்ண்ட். யாரை எதிர்கொள்ளும்போதும் ஒரு பெரிய்ய ஸ்மைலுடன் மீட் பண்ணவும். உடல் எடையை விட உங்கள் புன்னகையின் அளவு பிறரைக் கவர்ந்து விடும். கியாரண்டி!

**- லதா சேகர்**



# தீர்ப்பு!

படித்து விட்டு சுற்றித் திரிந்த இருபத்தைந்து வயது மகன் மீது பொன்னான நேரத்தை வீணடிக்கிறான் என்று வழக்குத் தொடர்ந்தார் தந்தை.

நீதிமன்றம் அவனுக்கு தீர்ப்பளித்தது: ஆம். அவன் பொன்னான நேரத்தை வீணடித்தது கண்டிக்கத்தக்கது. எனவே அவன் மீது இந்த கோர்ட் கண்டனம் தெரிவிக்கிறது.

(தீர்ப்பு வரும்போது மகன் பணியிலிருந்து ஓய்வுபெற்றிருந்தார்.)

**- ஜே.நாகராஜ், தஞ்சை மாவட்டம்.**

# கத்தாழ கண்ணால குத்தாது...!

அழகு சாதன நிலையம் செல்கிறீர்கள். உங்கள் முகம் பொலிவு பெற, உங்கள் முகத்தில் சாந்து பூசப்படுகிறது. வியர்வை வாடை அகல வாசனை சோப்பு தேய்த்துக் குளிக்கிறீர்கள். தோல் நோய்த் தொல்லைகளுக்கு களிம்பு தடவிக் கொள்கிறீர்கள். வெட்டுக் காயங்கள் ஆறிட ஆயின்மெண்ட் உபயோகிக்கிறீர்கள். இவை அனைத்திலும் 'சோற்றுக் கற்றாழை' எனப்படும் பாரம்பரிய மூலிகை, சர்வரோக நிவாரணியாக இடம்பிடித்துள்ளதென்று உங்களுக்குத் தெரியுமா?

சோற்றுக்கற்றாழையில் சுமார் இருநூறு ரகங்கள் இருக்கின்றன. எனினும் அவற்றில் மூன்று ரகங்கள் மட்டுமே அதிக மருத்துவக் குணங்கள் கொண்டவை. அந்த மூன்றிலும் குறிப்பாக, 'ஆலோ பார்படென்சிஸ்' (Aloe Barbadensis) என்றழைக்கப்படும் ஆலோவேரா-சோற்றுக்கற்றாழையில் மட்டுமே, மிக மிக அதிகமான மருத்துவக் குணங்களும் அதிக பயன்பாடும் நிரம்பப் பெற்றுள்ளன.

"கொட்டாம்பட்டியில் மூன்று வருடமாய் C.P. பிளான்டேஷன் என்கிற தொழிலகம் துவங்கி, அலாய் ஹெல்த் ட்ரிங்ஸ் (சோற்றுக் கற்றாழை சுவை நீர்) உற்பத்தி செய்து விநியோகித்து வருகிறேன். இதற்கென முப்பத்திரண்டு ஏக்கரில் பதினாறு விவசாயிகளை ஒன்றிணைத்து, சோற்றுக் கற்றாழையினைப் பயிரிடச் செய்து, அவர்களிடமிருந்து கற்றாழைகளைப் பெற்று வருகிறோம். தற்போது மார்க்கெட்டில் இதற்கு நல்ல வரவேற்பு இருக்கிறது!" என்கிறார் அதன் உரிமையாளர் பாண்டியன்.

44 டிகிரி செல்சியஸ் வரையுள்ள வெப்ப மண்டல நாடுகளில் வளரக்கூடியது சோற்றுக் கற்றாழை. தாய்ச் செடியிலிருந்து

கிளைத்து வரும் பக்கக் கன்றுகளே இதன் நாற்று. ஒரு ஏக்கருக்கு நான்காயிரம் பக்கக் கன்றுகள். ஆறேழு மாதங்களில் அறுவடை. இயற்கை உரம் மட்டுமே போதும். அதிக இடுபொருள் செலவு தேவையில்லை. தண்ணீரும்தான். ஆறு மாதங்களில் நான்கு முறை மட்டுமே தண்ணீர். அதுவும் தண்ணீர் தேங்கக் கூடாது.

''என் வீட்டுத் தோட்டத்தில் வளரும் ஆலோ பார்படென்சிஸ் சோற்றுக் கற்றாழை யிலிருந்து ஒரு துண்டு வெட்டி எடுத்து அதன் கூழினை (ஜெல்) தினசரி உட்கொள் கிறேன். மற்ற கற்றாழைக் கூழ் கசக்கும். இது கசப்பதில்லை. நமது உடலுக்குத் தேவையான எழுபத்தைந்து வகையான மருத்துவக் குணங்கள் மற்றும் சத்துக் களுடன் நோய் எதிர்ப்புச் சக்திக்கும் பெரிதும் துணைநிற்கக் கூடியது இந்தக் கூழ்!'' எனத் தெரிவிக்கிறார் வேளாண் அதிகாரி ஒருவர்.

புரோட்டீனை அதிகப்படுத்த உதவுவது அமினோ ஆசிட். மனித உடலுக்கு இருபத் திரண்டு வகை அமினோ ஆசிட்கள் தேவை. ஆலோவேராவில் இருபது வகை அமினோ ஆசிட்கள் அடங்கியுள்ளன. எலும்பு



✱ அக்ரி நாசர்

வளர்ச்சிக்குத் தேவையான கால்சியம் உள்ளது. கடும் வயிற்றுப் புண்ணுக்குக் கண் கண்ட தெய்வம். தோலில் ஏற் படும் தீக்காயம், அரிப்பு, வெட்டுக் காயங்களுக்கு இதன் கூழ் மாமருந்து. மக்னீசியம், மாங்கனீசு, சிங்க், காப்பர், குரோமியம், கால்சியம், சோடியம் மற்றும் பொட்டாசி யம் தாதுக்கள் நிறைந்துள்ளன. கற்றாழை இலைகளிலிருந்து எடுக்கப்படும் 'கூழ்' கிரீம் வடிவமாகி சருமப் பாதுகாப்புக்குப் பயன் தருகிறது.

''நல்ல லாபம் தரும் மூலிகை சாகுபடி இது. ஆலோவேரா கூழ் வேண்டப்படும் நிறுவனங்களுடன் நேரடி ஒப்பந்தம் செய்த பின்னரே விவசாயிகள் இதனைச் சாகுபடி செய்ய வேண்டும். இடைத்தரகர்களை நம்பி சாகுபடி செய்து, பின்னர் வியாபாரம் செய்ய முடியாமல் தவிப்போர் ஏராளம். நல்ல மருந்துக் கம்பெனியுடன் ஒப்பந்தம் செய்து கொண்டு, விவசாயிகளே 'கூழ்' எடுக்கும் யூனிட் ஏற்படுத்திக் கொள்ளலாம். அரசு உதவிகள் உள்ளன. அந்தந்த மாவட்டங் களின் வேளாண் வணிகத் துணை இயக் குனரை அணுகி விவரங்கள் பெற்றுப் பயன் அடையலாம்!'' எனக் கூறுகிறார் திருச்சி மாவட்ட வேளாண் வணிக அலுவலர் அக்ரி நாசர்.

**- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**



# கல்கி



2009 ஏப்ரல் 12
ஸர்வதாரி பங்குனி 30
மலர் : 67
இதழ் : 37

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்*

## தகிடுதத்தத்துக்குத் துணைபோகும் தலைவர்கள்!

**தெ**ன் சென்னைத் தொகுதியில் வேட்பாளராக நிற்கிறார் என்.எஸ். வேங்கடராமன். 'நந்தினி - வாய்ஸ் ஃபர் தி டிப்ரைவ்ட்' என்கிற தன்னார்வத் தொண்டு அமைப்பின் தலைவர். நல்ல மனம் படைத்த இவரது தேர்தல் செலவுகளை, தேசிய பாதுகாப்புக் கழகம் ஏற்றுள்ளது. தேர்தல் பட்ஜெட்டை ஓர் அறிக்கையாகவே பத்திரிகைகளுக்கு அனுப்பியுள்ளது. அரசியல் கட்சியாகப் பதிவு செய்யப்பட்டுள்ள இக்கழகம், இரு வேட்பாளர்களுக்கு இவர்கள் செய்யவுள்ள மொத்த செலவு, தேர்தல் கமிஷன் நிர்ணயித்துள்ள உச்ச வரம்பைவிட மிக மிகக் குறைவாக உள்ளது.

வாக்குறுதி வார்த்தை ஜாலங்களும், அடியாட்கள் பலமும், பண பலமும், ஜாதி அடிப்படையும் விளையாடும் தேர்தல் களத்தில், வேங்கடராமன் போன்றோர் வெற்றி பெற வாய்ப்பில்லைதான். ஆனால், இந்த முயற்சியில் காணப்படும் உத்வேகமும் சத்திய ஒளியும் தார்மிக நெறிகளின் வெற்றி. பொதுவாழ்வைத் தூய்மைப்படுத்த ஆத்மார்த்தமாக முயற்சி மேற்கொள்ளும் இத்தகைய பண்பாளர்களை, நமது அரசியல் தலைவர்கள் கட்சி நோக்கைக் கடந்து ஆதரித்து, ஜெயிக்கச் செய்தால், அரசியல் களமும் ஆரோக்கியமாக மாறும்; நாட்டுக்கும் நல்லது நடக்கும்.

ஆனால், நாம் காண்பது என்ன? மதுரையில் மட்டுமே திடுதிப்பென்று 90,000 "புது" வாக்காளர்கள் பதிவுக்கு விண்ணப்பிக்கப் போக, அவர்களுள் அனேகம் பேர் ஏற்கெனவே பதிவு பெற்றவர்கள்தான் என்பதை தேர்தல் கமிஷன் கண்டுபிடித்திருக்கிறது. கள்ள வோட்டுக்களைப் பெருக்கும் அப்பட்டமான இந்த மோசடியை, தமிழகத்தின் எந்த அரசியல்வாதியும் கண்டிக்கவில்லை; முதல்வர், மூச்சுக்கூட விடவில்லை!

அரசியல்வாதிகள் தார்மிக நெறிகளைத்தான் கடைப்பிடிக்கவில்லை எனில், அவர்கள் தகிடுதத்தங்களுக்குத் துணை போவதை எவ்வாறு பொறுப்பது?

பல்வேறு மாநிலங்களிலும் இதே போன்ற காட்சிகள்தான்: வருண்காந்தி ஹிந்து மதப் போராளியாகத் தம்மை பாவித்துக் கொண்டு வன்முறையைத் தூண்டுகிறார். பா.ஜ.க. அவரை ஆதரித்து, ஊக்குவிக்கிறது.

தமக்கு வழங்கப்பட்ட சிறைத் தண்டனையை தற்காலிகமாக நீக்கி, தாம் தேர்தலில் நிற்க வழி வகுக்க வேண்டும் என்று உச்சநீதி மன்றத்தில் மனு செய்யத் துணிகிறார் சஞ்ஜய் தத்! அந்தக் கோரிக்கை நிராகரிக்கப்பட்டது இந்த நாட்டின் நல்ல காலம்! இல்லாவிட்டால், அத்தனை கட்சிகளும் சிறையிலிருந்து கிரிமினல் குற்றவாளிகளை அழைத்து வந்து தேர்தலில் நிறுத்த முயற்சிகளை மேற்கொண்டிருக்கும்!

தமது கட்சிக்காரர்களின் துப்பாக்கி உரிமத்தை ரத்து செய்ததற்காக கீழ்நிலை நீதிமன்ற நீதிபதியையே மிரட்டுகிறார் முலாயம் சிங் யாதவ்!

அஜ்மல் கஸாபுக்காக வாதாட நீதிமன்றத்தால் நியமிக்கப்பட்ட வழக்கறிஞர் அஞ்சலி வஹ்மேரை மிரட்டி, அவமானப்படுத்தும் சிவ சேனா தொண்டர்களை, அக்கட்சித் தலைமை மௌனமாக வேடிக்கை பார்க்கிறது!

ஜனநாயகம் என்ற பெயரில், கண்ணியமும் சகிப்புத்தன்மையுமற்ற குண்டர்களின் கை, நாளுக்கு நாள் ஓங்கி வருவது தெளிவாகத் தெரிகிறது. இந்நிலையில், தேர்தல் கமிஷனின் பொறுப்பும் அது சந்திக்கும் சவால்களும் அதிகரித்துள்ளன. அதன் நடுநிலையான செயல்பாடு மட்டுமே, தேர்தல் நியாயமாக நடக்க உதவி, ஜனநாயகத்தை நிலைநாட்ட முடியும். வாக்காளர்களின் விழிப்புணர்வும் அறிவுபூர்வமான அணுகுமுறையும்தான் நல்லாட்சி உருவாக உதவி, நாட்டைக் காக்க முடியும். ●

# தேர்தல் களம்



ஐக்கிய
முற்போக்கு
கூட்டணி




கூட்டணி வரவேற்பு
தொகுதி பங்கீடு






இவரை மட்டும் தூக்கினா தந்திரம்; அவரையும் சேர்த்துத் தூக்கினா ராஜதந்திரம்
ராகுல் காந்தி




ஓட்டுக்காக இல்லைப்பா நீ ஏழை; சும்மா வைச்சுக்கோ
₹500




மாலவிகளின் 'ரெயின்போ கலாட்டா' கலக்கல். படிக்கும்போது சிரிப்போ சிரிப்பு!

- ஆர். பிருந்தாரமணி, மதுரை

ஓசை சங்கிலியின் அசைவுகளில் தமிழின் இன்னிசை நாதம், அளப்பரிய ஆனந்தத்தை அள்ளி வழங்குகின்றது.

- சு.ஸ்ரீகாந்த், நெய்வேலி

கார்ட்டூன்கள் இரண்டும் நச். சுருங்கச் சொல்லி நிறைய விளங்க வைத்தது.

- என்.காளிதாஸ், சிதம்பரம்

'பரீட்சை பற பற' படித்து 'சிரி சிரி' என சிரித்தேன். பரீட்சை இருப்பதும் 'மற மற' என மறந்து விட்டது.

- எஸ்.திஷா, ஹோசூர்

'வருண் காந்தியின் வன்முறைப் பேச்சு' தலையங்கம், சர்வ நிச்சயமாக குருடர்கள் கண்களைத் திறக்க வைக்கும் தலையாய அங்கம்தான்.

- கிருஷ்ண. ராஜ்கோபால், சென்னை-92

அட்டையில் போலீஸ் குவார்ட்டர்ஸில் குல்மொஹர் நாயகி ஸ்ருதி படம் செம கலக்கல்.

- ஏ.பி.எஸ்.ரவீந்திரன், நாகர்கோவில்.

'காணாமல் போனவன்' என்ற கதை அருமை. சித்திரிக்கும் படமும் பாராட்டுக்குரியது.

- வெ.புவனேஸ்வரி,கும்பகோணம்

தஞ்சை பரத்வாஜ் எழுதும் 'நடக்குமென்பார்; நடக்கும்' ராசி பலனில் சொன்னது நடக்கிறது. சரியான கணிப்பு!

- வயலூர் பா. அச்சுதன்

கல்கிக்கு மட்டும் எப்படி சார் அப்படி ஒரு ஞானதிருஷ்டி? 13.6.1948லேயே அப்படி ஒரு கட்டுரை எழுதிவிட்டார்! மெட்ராஸ் திரும்பவும் சென்னை ஆனது போல் அவர் கனவு பலிக்க வேண்டுகிறேன். அன்றும் இன்றும் என்றும் கல்கி கல்கிதான்.

- என்.சீத்தாலட்சுமி, சென்னை-40

அக்கம் பக்கம் பகுதியில், தேர்தல் விஷயங்கள் சுவாரஸ்யம்.

- ஜி.வெங்கடரமணன், சென்னை-4

# புது கேப்டன்



**ஆர்.எஸ்.எஸ்.** அமைப்புக்குத் தலைவராக இருந்த கே.எஸ்.சுதர்சன் ஓய்வு பெற்று, மோகன் பகவத் புதிய தலைவராகப் பொறுப்பேற்றிருக்கிறார். 1949ல் பிறந்தவரான பகவத் 59 வயதில் ஆர்.எஸ்.எஸ். தலைவராகி இருப்பது ஆர்.எஸ்.எஸ். காரர்களையே ஆச்சரியப்படுத்தியிருக்கிறது. இவரது தாத்தாவும், அப்பாவும் கூட ஆர்.எஸ்.எஸ்.காரர்கள்தான். மோகன் பகவத் கால்நடை மருத்துவக் கல்லூரியில் பட்டப் படிப்பை முடித்துவிட்டு, பட்ட மேற்படிப்பு படித்துக் கொண்டிருந்தபோது, படிப்புக்கு டாட்டா சொல்லிவிட்டு, ஆர்.எஸ்.எஸ்.க்கு வந்து விட்டார்.

''சுறுசுறுப்பானவர், சிறந்த பேச்சாளர்; சிந்தனையாளர்; கடந்த கால சரித்திரத்தில் மட்டுமின்றி, நிகழ்கால சரித்திரத்திலும் ஆழ்ந்த அறிவு கொண்டவர்'' என்று குறிப்பிடப்படும் மோகன் பகவத்தின் ஞாபக சக்தி அபாரமானது. அதற்கு உதாரணமாக ஒரு சம்பவத்தைச் சொல்கிறார்கள்: சில ஆண்டுகளுக்கு முன்பு நாக்பூரில் ஒரு ஆர்.எஸ்.எஸ். முகாம் நடைபெற்றது. அதில் சுமார் 700 பேர்கள் கலந்து கொண்டார்கள். அவர்கள் எல்லோரையும் பெயர் சொல்லி அழைக்கும் அளவுக்கு அனைவரது பெயர்களையும் கேட்டு நினைவில் நிறுத்திக் கொண்டார் பகவத்.

**ப**கவத்துக்கு இசையில் மிகுந்த ஆர்வம் உண்டு. பீம்சென் ஜோஷி, படே குலாம் அலி கான், பாகிஸ்தானி இரட்டையரான சல்மத் அலி, நஜகத் அலி ஆகியோரது பரம ரசிகரான பகவத், பாரம்பரிய பாண்டு இசைக் குழுவில் இடம் பெறும் பலவிதமான இசைக் கருவிகளை லாகவமாக இசைக்கும் திறமைசாலி.

நிறையப் படிக்கும் பழக்கம் கொண்டவரான பகவத்தின் படுக்கையை ஒட்டி ஏராளமான புத்தகங்கள் படிக்க வேண்டிய முக்கியத்துவ வரிசைப் படி அடுக்கி வைக்கப்பட்டிருக்கும். நல்ல இந்திப் படங்கள் என்றால் பார்க்கத் தவற மாட்டார். விதர்பா பகுதி ஸ்பெஷல் உணவுப் பிரியரான பகவத், இனிப்பு பூரணப் போளி என்றால் தன்னைப் படுத்தும் சர்க்கரை நோயையும் மறந்துவிடுவார்.

**''தொ**ண்டர்களின் அர்ப்பணிப்புதான் ஆர்.எஸ்.எஸ்.ஸின் பலம். அதை நம்பித்தான் இந்தப் பெரும் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருக்கிறேன்'' என்று கூறியிருக்கிறார் பகவத். ஆனால், ''அவருக்குப் பெரும் சவால்கள் காத்திருக்கின்றன'' என்று சொல்லும்போதே, ''அவரது செயல் திட்டம் குறித்த எதிர்பார்ப்பும் அதிகமாகவே உள்ளது'' என்கிறார்கள் சங்க பரிவாரத்தினர்.

**– கௌதம்ராம்**

# தஞ்சை பரத்வாஜ்

# 05.04.09 முதல் 11.04.09 வரை

**மேஷம்:** வாக்குவன்மை மேலோங்கும். பண வசதி பெருகும். திருமணம் கைகூடும். வீடு மாற்றம், தொழில் மாற்றம் உண்டாகும். வராத நிலுவைகள் வந்து சேரும். செலவுகள் கட்டுக்குள் இருக்கும். பூர்வீகச் சொத்து கைக்கு வந்து சேரும். குழந்தைகள் இடம் மாறிப் போவார்கள். வழக்கு வெற்றி அளிக்கும்.

**ரிஷபம்:** மன சஞ்சலம் தீரும். வெளிநாட்டிலிருந்து நல்ல தகவல் வந்து சேரும். நீண்டதூரப் பிரயாணம் செய்வீர்கள். பணம் காசுக்குக் குறைவு இருக்காது. தடைப்பட்டு வந்த திருமணம் கைகூடும். மேற்கல்விக்கான முயற்சிகள் பலன் அளிக்கும். புதிய தொழில் துவங்க ஏற்ற தருணம்.

**மிதுனம்:** எல்லோரிடமும் விட்டுக் கொடுத்து வாக்குவாதம் செய்யாமல் இருப்பது நல்லது. வேலை பளு அதிகரிக்கும். பொருளாதாரத் தேவை அதிகரிக்கும். அதை எப்படியோ சமாளிப்பீர்கள். உடல் நிலையில் கவனம் தேவை. யாருக்கும் ஜாமீன் போடக் கூடாது. புதிய முயற்சிகளை சற்றுத் தள்ளிப்போடவும்.

**கடகம்:** திருமணக் காரியம் கைகூடும். வழக்கு வெற்றி அளிக்கும். பணவசதி பெருகும். கடன் சுமை தீரும். வெளியூரிலிருந்து நல்ல தகவல்கள் வரும். செலவுகள் கட்டுக்குள் இருக்கும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். கணவன் - மனைவிக்குள் இருந்துவந்த மனக்கசப்பு விலகும்.. பணப் பிரச்னை தீரும்.

**சிம்மம்:** தேவை இல்லாத மன பயம் வாட்டி எடுக்கும். உத்தியோகத்தில் இடமாற்றம் ஏற்படும். கடன் பிரச்னை தீரும். நண்பர் / உறவினர்கள் மூலம் செலவுகள் அதிகமாகும். புதிய தொழில் முயற்சியை சற்றுத் தள்ளிப் போடவும். மறைமுக எதிர்ப்புகள் இருக்கும்.

**கன்னி:** எண்ணங்கள் யாவும் ஈடேறும். புதிய சொத்து வாங்கும் யோகம் கிட்டும். திருமணம் கைகூடும். வாகன யோகம் கிட்டும். கடன் சுமை விலகும். ஆடை ஆபரணப் பொருட்கள் சேரும். வியாபாரத்தில் முன்னேற்றம் ஏற்படும். பண வசதி மிகுதியாகும். பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். கூட்டாளிகள் விலகிப் போவார்கள்.

**துலாம்:** மனநிறைவான வாரம். மன உளைச்சல் தீரும். கடன் தொல்லை தீரும். செலவுகள் சுபமானதாக இருக்கும். வேலை மாற்றம் ஏற்படும். புதிய தொழில் முயற்சி பலன் அளிக்கும். பணப் பிரச்னை தீரும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். குழந்தைகள் மூலம் சந்தோஷம் உண்டாகும். புதிய வீடு / மனை வாங்க உகந்த நேரம்.

**விருச்சிகம்:** செல்வாக்கு மிகுந்த வாரம். புண்ணிய ஸ்தலம் செல்வீர்கள். புதிய வீடு / மனை வாங்க நல்ல காலம். மகான்களின் தரிசனம் கிட்டும். சுபகாரிய நிகழ்ச்சிகள் கை கூடும். நீண்ட காலம் வராத நிலுவைகள் வந்து சேரும். குழந்தைகள் மூலம் சந்தோஷம் உண்டாகும். செலவுகள் கட்டுக்குள் இருக்கும்.

**தனுசு:** திருமணம் தடை விலகி கைகூடும். காதலுக்குப் பிரச்னை இருக்காது. கல்வியில் இருந்து வந்த மன பயம் விலகும். மனத்தில் உற்சாகம் ஏற்படும்.

# நடக்குமென்பார்; நடக்கும்!

வாக்கு வன்மை மேலோங்கும். உடல் நிலை பாதிக்காது. குடும்ப வாழ்வில் இருந்து வந்த மனக்கசப்பு விலகி குடும்பம் ஒன்றுபடும். பணவசதி பெருகும்.

**மகரம்:** கஷ்டங்களிலிருந்து விடுதலை கிடைக்கும். செலவுகள் பயனுள்ளதாக இருக்கும். வியாபாரத்தில் முன்னேற்றம் ஏற்படும். உத்தியோகத்தில் இருந்து வந்த பிரச்னைகள் தீரும். திருமணம் கைகூடும். கல்வியில் முன்னேற்றம் ஏற்படும். வழக்கு வெற்றி அளிக்கும். நல்ல தகவல் வந்து சேரும்.

**கும்பம்:** உற்சாகமான வாரம். வாகன சுகம் ஏற்படும். புதிய வீடு / மனை வாங்க உகந்த நேரம். ஆன்மிகப் பயணம் செல்வீர்கள். பணக் கஷ்டம் இருக்காது. வராத நிலுவைகள் வந்து சேரும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். புதிய வேலை வாய்ப்பு தேடி வரும்.

**மீனம்:** புதிய வீடு மனை வாங்க நல்ல தருணம். நண்பர், உறவினர் மூலம் அனுகூலம் ஏற்படும். பூர்வீகச் சொத்து பாகப் பிரிவினை ஆகும். திருமணம் கைகூடும். நல்லவர் உதவி வந்து சேரும். பண வசதி பெருகும். கடன் சுமை தீரும். தேர்வில் எதிர்பார்க்கும் மதிப்பெண்கள் கிடைக்கும். வழக்கு வெற்றி அளிக்கும்.



"தமிழ்நாட்டு எழுத்தாளர்களிடையேதான் சண்டை சச்சரவு, குழு அரசியல், நீ பெரியவனா நான் பெரியவனா என்ற ஈகோவெல்லாம். ஆனால் இவை ஏதுமின்றி, துணுக்கு எழுத்தாளர்கள் தனி மரமா நிக்காம தோப்பாகத் தானிருப்போம். நாங்க எல்லோரும் மாசத்துல கடைசி ஞாயிறு, தஞ்சை பெரிய கோயில் புல் தரையில் ஒன்னு கூடுவோம். மனம் விட்டுப் பேசுவோம். வந்து பாக்கறீங்களா?'' 'செல்' விடு தூது வந்தது தஞ்சை - நாகை - திருவாரூர் பகுதி துணுக்கு எழுத்தாளர்களிடமிருந்து.

கொளுத்துற வெயில்ல குச்சி ஐஸ் ருசிக்க கூலி வேணுமான்னு... உடனே கிளம்பினோம்.

''நான் ஒரு தடவை பாசஞ்சர் ட்ரெயின்ல கூடை நெறைய வடை வாங்கிட்டுப் போனேன். பேரளம் மெதுவடை ரொம்ப ஃபேமஸ். பேரளத்துலேந்து நாகை போற வரைக்கும் வடையைப் புட்டுப்புட்டு ட்ரெயின் மேற்கூரையில வீசிட்டு வந்தேன். நாகை போய்ச் சேர்ற வரைக்கும் நாப்பது அம்பது காக்கைங்க அந்த வடைத் துண்டுகள கொத்தித் தின்னுகிட்டே வந்திச்சுங்க. இந்த அனுபவத்தை ஒரு துணுக்கா எழுதி அனுப்பிச்சேன். பிரசுரமாச்சு. அந்தச் செயலைப் பாராட்டி எனக்கு நெறைய கடிதம் வந்திச்சு!'' என்கிறார் பாபநாசம் வி.பி.கே. மூர்த்தி.

''பிரபல எழுத்தாளர் ஒரு தடவை, துணுக்கு எழுதுபவர்களை 'எழுத்துப் பொறுக்கிகள்!'னு குறிப்பிட்டார். இன்டர்நெட்டுல இருந்தும் உலக இலக்கியம், உலக சினிமாவிலிருந்தும் 'உருவுற' காஸ்ட்லி ரைட்டர்களை என்ன சொன்னா தகும்?'' என்று வெயிலில் சூடானார் தஞ்சை தாமு.

# டிரெயின்ல டிராவல் செய்த காக்கைகள்

"எங்க ஆபீஸ்ல பத்து பேரு. திருப்பதி போய்ட்டுத் திரும்பி வர்றோம். வேலூர் பஸ். காட்பாடி முன்னால டயர் பஞ்ச்சர். பஸ் நின்னு போச்சு. எல்லாரும் கீழ எறங்கிட்டாங்க. எதுத்தாப்ல ஒரு வீடு. வாசல்ல ஒருத்தர் உக்காந்து, அந்த வாரம் நான் எழுதின 'டயலாக்' ஒண்ணைப் படிச்சிட்டு இருந்தார். ஆர்வக் கோளாறுல நான் எட்டிப் பார்த்தேன். புத்தகத்தை மூடிட்டு அவரு 'என்ன?'ங்கறாப்ல பார்த்தாரு. அந்த டயலாக் எழுதினது நான்தான்னு சொன்னேன். அவரு ரொம்ப உற்சாகமாய்ட்டாரு. அவரும் துணுக்கு எழுத்தாளர்னு அப்புறமா தெரிஞ்சுகிட்டேன். டயர் பஞ்ச்சர் ஒட்டி

* எழுத்தாளர்கள் சந்திப்பு

''டிராக்டர் ஓட்டின ஆளை... பஸ் ஓட்ட விட்டது தப்பாப் போச்சு. பழக்கதோஷத்துல வயல்ல விட்டுட்டார்னு ஒரு ஜோக் எழுதிப் பிரசுரமாச்சு. உடனே டிராக்டர் நல ஓட்டுனர்கள் சங்கத்துலேர்ந்து கண்டனக் கடிதம் பத்திரிகை ஆபீஸுக்கு வந்து குவிஞ்சது. மறுவாரமே அந்தப் பத்திரிகையில குறிப்பிட்ட 'ஜோக்'ஐ மாத்திப் பிரசுரிச்சாங்க. 'டிராக்டர் ஓட்டினவரை பஸ் ஓட்ட விட்டது நல்லதாப் போச்சு. பஸ்ஸை வயல்லேர்ந்து ரோட்டுக்கு எத்திக் கொண்டாந்துட்டாரு!'னு. இது எப்படி இருக்கு...?'' என்று வினவுகிறார் அகூர் ரவி.

ஒருமுறை புகார்ப் பகுதியில 'பேருந்து ஓட்டுனர்கள் மது அருந்தி விட்டு பஸ் ஓட்டுறாங்க. இது தவிர்க்கப்படணும்'னு ஒரு துணுக்கு எழுதிட்டேன் என் பேரோட. ரெண்டு நாள் கழிச்சு என்னை அடையாளம் கண்டுட்டு, பஸ் டிரைவர்ங்க அஞ்சு பேரு என்கிட்டே சண்டைக்கே வந்துட்டாங்க. அவங்கள நா சமாளிச்சது எனக்குத்தானே தெரியும்'' என மூச்சுவாங்கினார் திருவைக்காவூர் முருகானந்தம்.

''என்னோட பூர்விகம் தஞ்சை. வேலைக்காக அரியலூர் போன புதுசுல பேங்க் அக்கவுண்ட் ஓபன் பண்ண அறிமுகக் கையெழுத்துக்கு ஆள் கிடைக்கலை. என் அப்ளிகேஷனைப் படிச்சுப் பார்த்த கிளார்க், 'நீங்க ஜோக்ஸ் எழுதற சுந்தரமூர்த்தியா?'னு கேட்டாரு. ஆமாங்கன்னு சொன்னேன். அட... வாங்க சார்னு அவரே எனக்கு எழுந்து வந்து கையொப்பமிட்டு அக்கவுண்ட் ஓபன் பண்ணி உதவினார்!''னு சொல்கிறார் ஜி.சுந்தரமூர்த்தி.



பஸ் கிளம்பிச்சு. எங்க பத்து பேரையும் பஸ் ஏற விடலை அவரு. அவர் வீட்ல வடை பாயசத்தோட சாப்பிட வெச்சு, அப்புறமா வேற பஸ்லதான் எங்கள ஏத்தி வழியனுப்பி வைச்சாரு காட்பாடி சுகுமார்!''னு தன்னோட அனுபவங்களைப் பகிர்ந்துக்கிட்டாரு கபிஸ்தலம் இராஜேந்திரன்.



''காக்கைக்கு விருந்து... மனுசாளுக்கு விருந்துனு பேசிட்டு இருக்கீங்க. ஒரு ஆளு என்னோட துணுக்கு களைப் படிச்சிட்டு வாழ்க்கை பூரா என்னையே விருந்து படைக்க வர முடியுமான்னு தாண்டில் போட்டாரு!''னு ஓங்கி ஒரு போடு போட்டது தஞ்சை அனார்கலி குரல். எல்லாரும் அந்த அனார்கலி பக்கம் திரும்பினாங்க. சஸ்பென்சை உடைச்சது அனார்கலியோட பதில். ''யாரோ ஒரு இளைஞர், 'அனார்கலினு ஒரு பொண்ணு நெறைய ஜோக் எழுதுது. அந்தப் பொண்ணுக்கு இன்னும் கண்ணாலம் ஆகலைன்னா, நானே அந்த அனார்கலிய கட்டிக்கிறேன்'னு என்னோட மச்சான்ட்ட வந்து சொல்ல, அவரும் 'அனார்கலிய உன்கிட்ட அழைச்சு வந்து பேச வைக்கிறேன். அப்புறமா முடிவு பண்ணிக்க'னு ரவுசு விட்டுருக்காரு. என்னைப் பார்த்த அந்த இளைஞருக்கு மொகத்துல பத்தாயிரம் வோல்ட் அதிர்ச்சி. ஏன்னா... நான்தான் 'அழகிய இளைஞன்!' ஆச்சே.''

''அந்நியன் சினிமாவுல பிரகாஷ்ராஜ் புலனாய்வு அதிகாரி. துப்பு துலக்கப் போற எடத்துல நாந்தான் 'அயன்புரம் சத்தியநாராயணன்'னு தன்னை அறிமுகப்படுத்திக்குவாரு. இது துணுக்கு எழுத்தாளர்களுக்குக் கிடைச்ச பெருமைதானே!'' என்கிறார் கவிஞர் ரவிராஜ்.

''கல்கில 'எங்க ஊரு கோயில்' பகுதியில புது ஆத்துப்பாலம் சக்தி முனியாண்டவர் கோயில்ல இருக்கற நாகநாத விநாயகர் பத்தி போட்டோவோட துணுக்கு எழுதியிருந்தேன். அதை ஃப்ரேம் பண்ணி அந்தக் கோயில்ல மாட்டி வச்சாங்க. பக்தர்கள் வருகை அதிகமாச்சு. அந்த வருஷம் திருவிழாவுல எனக்குப் பரிவட்டம் கட்டி கௌரவப்படுத்தினாங்க. ஒத்த துணுக்கு கூட ஊர் பரிவட்ட மரியாதையை வாங்கித் தரும்''னு தஞ்சை பளபளத்தார் பா.து. பிரகாஷ்.



தே.ராஜாசிங் ஜெயக்குமார், சா.மல்லிகாவும் அவங்க அனுபவத்தைச் சொல்லி முடிக்க, இறுதியாய், ''சிறுகதைகள் ஒரு நிமிடக் கதையானது. கவிதை மூனு வரி ஹைக்கூவாக மாறிப் போனது. துணுக்கு மட்டும்தான் இளமை குறையாமல் மார்க்கண்டேயனாய் இன்னும் இருக்கிறது'' என்று 'பஞ்ச்' டயலாக் போட்டு கூட்டத்துக்கு சுபம் போட்டு சுவாரஸ்யமாக்கினார் இராம. ஆதி நாராயணன்.

– ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு



காத்தவராயன் படத்தை இயக்கிய இயக்குநர் சலங்கை துரையின் இரண்டாவது படம் 'காந்தர்வன்'. இவர் மலையாளத்தில் இருநூறு நாட்களுக்கும் மேலாக ஓடிய 'டி' திரைப்படத்தின் கதை, திரைக் கதையை அமைத்துக் கொடுத்தவர். பிரபல நடிகர் மோகன்லாலின் மகன் 'டி' படத்தின் கதாநாயகன் என்பது குறிப்பிடத்தக்கது.

'நிறம்', 'காத்தவராயன்' படங்களில் நடித்த கதிர் இப்படத்தின் கதாநாயகனாக, குடிநீர் விநியோகம் செய்யும் கதாபாத்திரத்தில் நடிக்கிறார். இயக்குநரை இரண்டு வருடங்கள் பின்தொடர்ந்து இப்படத்தின் கதாநாயகன் வாய்ப்பை வாங்கியுள்ளார். தொடர்ந்து கதாநாயகனாகத்தான் நடிப்பீர்களா எனக் கேட்டதற்கு...

''ஹீரோவாக மட்டுமே நடிக்காமல், கிடைக்கும் சிறு சிறு வேடங்களில் நடிப்பதன் மூலமாக எங்கேயாவது ஒரு மூலையில் ஒட்டிக்கொண்டு திரைத் துறையில் நான் இருக்கவே ஆசைப் படறேன்'' என்றார். கதையின் நாயகி 'ஹனி ரோஸ்' கேரளத்தின் ஏஞ்சல். மலையாளம், தெலுங்கு படங்களை முடித்த கையோடு தமிழில் களம் இறங்குகிறார். தனது பெயரை மாற்றி ராசியான பெயர் வைத்துக் கொள்ள ஆலோசித்து வருகிறாராம். மலையாள இயக்குனர் 'லாலு'வின் சகோதரரான அலெக்ஸ் பால் இசையமைக்கிறார். இருபதுக்கும் மேற்பட்ட மலையாள முன்னணி நட்சத்திரங்கள் நடித்த படத்துக்கு இசையமைத்திருந்தாலும், தமிழில் இதுவே முதல் படம். பிரபல ஒளிப்பதிவாளர் ராஜீவ்மேனனின் உதவியாளர் அனில் கே.சேகர் ஒளிப்பதிவு செய்கிறார். தாமரை மூவிஸ் வழங்க, இண்டியன் புரொடக்ஷன்ஸ் பட நிறுவனம் சார்பாக வி.ஏ. ஆண்டமுத்து தயாரிக்கிறார். இவர் முன்னால் எம்.எல்.ஏ.வும்கூட. ஏப்ரல் 10ம் தேதி தொடங்கி படப்பிடிப்பு நடைபெறுகிறது. படத்தின் கதை ரொமாண்டிக் த்ரில்லராம்... பார்க்கலாம்!

- கிராபியென் ப்ளாக்



# கேரளத்து ஏஞ்சல்!

# படித்துறை!

• சரவணன் •

கடிதம் வந்தபோது, சகுந்தலா சாப்பிட்டபடியே டி.வி. தொடர் பார்த்துக் கொண்டிருந்தாள். தனக்கு நினைவு தெரிந்த நாள் முதலாக வற்றாத குளம் எப்படி முழுவதுமாக வற்றித் தூர்ந்துபோனது? அவளால் நம்பவே முடியவில்லை. தேவி பொய் சொல்லமாட்டாள். கடிதத்தின் வார்த்தைகள் குளம் வற்றிய துயரைக் கூர்மையாக வெளிப்படுத்தியிருந்தன. இப்போதே ஊருக்குச் சென்று குளத்தைப் பார்க்க வேண்டும் என அவள் மனம் துடித்தது. 'குளம் பற்றிய துயரம் என்னைப் பாதித்ததுபோலவே தேவியையும் பாதித்திருக்க வேண்டும். அதனால்தான் கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறாள் போலும்' என்றும், 'அது கார்த்திகா, மீனாட்சி, சுகந்தி, நளினி முதலியோரையும் பாதித்திருக்கும்' என்றும் நினைத்துக் கொண்டாள். இன்றென்னவோ அவளுக்கு மதியத் தூக்கம் வரவேயில்லை. கடிதத்தை மீண்டும் படித்தாள். எத்தனை முறை படித்தாலும் அதே செய்தி தானே?

மாலையில் கணவர் வந்தவுடன், 'அம்மாவைப் பார்க்க வேண்டும்' எனப் பொய் சொல்லிவிட்டு மறுநாள் ஊருக்குப் போகத் திட்டமிட்டாள். 'குளம் வற்றிவிட்டது; அதைப் பார்க்கவேண்டும்' என்று சொன்னால் அவர் சிரிக்கத்தான் செய்வார். நகர நெரிசலில் புறாக்கூண்டு போன்ற அபார்ட்மெண்டுகளிலேயே பிறந்து வளர்ந்த அவரை, பல்லாண்டு கால குளத்தின் மரணம் எந்தவிதத்திலும் பாதிக்காதுதான். அவர் வந்தவுடன் உறுதிபடப் பொய்யைக் கூறினாள்.

''என்னவோ தெரியலைங்க. என் அம்மாவைப் பாக்கணும்போல இருக்குது. நான் போய்ப் பார்த்துட்டு வரட்டுமா?'' என்றாள்.

''மூணுவாரத்துக்கு முன்னாடிதானே போன?'' என்றார். தன்நிலை சீண்டப்பட்டவளாக, ''நீங்களும்தான் ரெண்டு நாளைக்கு ஒரு தடவை உங்க அம்மாவைப் பார்க்கப் போறீங்க. அதப்பத்தி நான் ஏதாச்சும் கேக்கிறேனா?'' என்று கூறினாள்.

அவளது நியாயவாதத்துக்கு மானசீகமாகத் தலைவணங்கியவாறு, ''போயிட்டு எப்ப வருவ?'' என்றார்.

உடனே மனம் குளிர்ந்தவளாய், ''காலையில் போய்ப் பாத்துட்டு, சாயந்திரமே வந்துடுவேன்'' என்றாள்.

''அப்ப நானும் வர்றேன்'' என்றார்.

பொங்கிய கோபத்தை அடக்கிக் கொண்டு பணிந்த குரலில், ''ஒரு நாளாவது நிம்மதியா இருக்கலாம்னுதான் அங்க போக நினைக்கிறேன்'' என்றாள்.

''சரி போ'' என்று அவர் கூறிய உடனேயே, தன் ஊரான பொய்கைக்கரைப் பட்டி மண்ணில் தன் கால்களை வைத்துவிட்டதைப் போல உணர்ந்தாள்.

பேருந்துப் பயணம் முழுவதுமாக அவளுக்குக் குளம் பற்றிய நினைவிலேயே நிகழ்ந்தது.

பிரதான சாலையின் வலதுபுறமுள்ள பொய்கைக்கரைப்பட்டிவிலக்கு பேருந்து நிறுத்தத்திலிருந்து, ஒரு கிலோ மீட்டர்

தூரம் உள்ளடங்கியவாறு பொய் கைக்கரைப்பட்டி கிராமம் அமைந்துள்ளது. கிராமத்துக்கு வெளிப்புறமாக நடைதூரத்தில் அந்தப் பழைய குளத்தை அடைந்து விடமுடியும். சுற்றிலும் கருங்கற்கள் பாவப்பட்டு மிகப்பெரிய சதுரமாகத் தோற்றம் தரும் அக்குளத்துக்குக் கிழக்கு முகமாகப் பெண்கள் படித் துறையும், மேற்கு முகமாக ஆண்கள் படித் துறையும் பாறையைச் செதுக்கிப் படியாக்கப்பட்ட சுமார் பதினைந்து படிக்கட்டுகளால் அமைந்துள்ளன. தண்ணீருக்குள் எப்போதும் மூன்று படிகள் மூழ்கிய நிலையிலேயே இருக்கும். கை நடுவிரல் அளவுள்ள மீன்கள் கூட்டம் நீரின் அலைவால் கலைந்து படிகளைத் தொட்டுச் செல்லும். கடைசிப் படிக்குக் கீழே

**“குளம் வற்றிவிட்டது அதைப் பார்க்க வேண்டும் என்று சொன்னால் அவர் சிரிக்கத்தான் செய்வார்”**



ஓர் ஆள் மட்டத்துக்கு நீர் கருமை நிறத்தில் நிலை பெற்றது போலவும், குளத்தின் மேற்பரப்பு நீர் எப்போதும் அலைந்தபடியே படிகளையும், சுற்றுச் சுவரையும் தொட்டுத் தடவியவாறும் இருக்கும். மழைக் காலத்தில் செம்மண் நிறத்திலும், கோடைக்காலத்தில் நீல நிறத்திலும், பிற காலங்களில் வெளிர் பச்சையாகவோ அடர் கருமையாகவோ தோற்றம் தரும் அக்குளம். தன் படித்துறையின் நிறத்தை மட்டும் எக்காலத்திலும் மாற்றிக் கொண்டதில்லை. வெளிர் பச்சை நிறத்திலும், கரும் பச்சை நிறத்திலும் வெல்வெட்டின் மென்மையோடு கூடிய பாசிப்படலத்தால் பைண்டு செய்யப்பட்டது போலத் தோற்றம் தரும் படிக்கட்டுகளில் வழுக்கி விழாதவர்கள், அக்கிராமத்தில் யாரும் இல்லை.

பொய்கைக்கரைப்பட்டிவிலக்கு பேருந்து நிறுத்தத்தில் இறங்கி நடக்கத் தொடங்கினாள். ஹேண்ட் பேக் இடுப்பை உரசியபடியே மெல்ல அதிர்ந்து ஆடிக் கொண்டிருந்தது. செம்மண் சாலையில் மாட்டு வண்டித் தடங்கள் அழுத்தமாகப் பதிந்திருந்தன. 'இதில் பேச்சிமுத்துவின் மாட்டு வண்டித் தடமும் கலந்திருக்குமா?' என நினைத்துக் கொண்டாள். செம்புழுதியோடுகூடிய அனற்காற்று சாலையில் அலைந்து கொண்டிருந்தது.

ஆறு தோழியர்களும் நீர்ப்பரப்புக்கு மேலிருக்கும் படியில் அமர்ந்துகொண்டு, கால்களை நீரில் அளைந்தபடியே துணிகளைத் துவைத்து, வம்புப் பேச்சுகள் பேசி, ஆண்கள் படித்துறையில் இவர்களைப் போலவே குழுவாக அமர்ந்து துணிகளைத் துவைக்கும், கூட்டமாக நீரில் இறங்கி நீந்திக் கரையேறும் ஆண்களில் தனக்குப் பிடித்தவரைக் கடைக்கண்ணால் நோட்டமிட்டவாறும், சில சமயம் நீரில் சிறு வட்டமாக நீந்தியபடி தலையை நிமிர்த்தி அவர்களைத் தீர்க்கமாகப் பார்த்தவாறும் தமது காலைப் பொழுதின் வேலையழுப்பினைப் போக்கிக் கொள்வர்.

முதன்முதலாக அணிந்த கொலுசினைக் கார்த்திகா தொலைத்ததும், சகுந்தலா தனக்குப் பிடித்தவரான பேச்சிமுத்துவின் பெயரினை ஹேர்பின்னால் பாசிபடிந்த படிகளில் பல முறை எழுதிப் பார்த்ததும், பொருத்தமில்லாத மாப்பிள்ளையைப் பார்த்ததனால் நளினி வாய்விட்டுக் கேவிக் கேவி வெகு நேரம் அழுததும், வீட்டார் வசை பாடியதால் மனம் உடைந்த தேவி தற்கொலை

## திக்கெட்டும் திருமுறை!

தமிழறிஞர் 'காந்தளகம்' க.சச்சிதானந்தம் துவக்கி நடத்தி வரும் தேவாரம் மின்னம்பல தளத்தில் (www.thevaaram.org) பன்னிரு திருமுறைகளிலுள்ள 18,246 பாடல்களையும் இசையாகக் கேட்டுப் பயனுற, தொடர் ஏற்பாடுகள் நடந்து வருகின்றன. திட்டச் செலவு ரூபாய் ஐந்து லட்சம் ஆகுமாம். முதல்கட்ட முயற்சியாக எட்டாம் திருமுறை (திருவாசகம்)யின் 658 பாடல்களை, திருத்தணி சுவாமிநாதனின் குரலிசையாய்க் கேட்கலாம். தருமபுரம் சுவாமிநாதனும் 392 பாடல்களைப் பாடியுள்ளாராம். இது தமிழிசை அன்பர்களுக்கும் இந்து நேசர்களுக்கும் காதில் தேன்பாயும் செய்திதான்.

- ஆதித்யா



செய்துகொள்ளத் திட்டமிட்டதும், ஒரே வகுப்பில் படித்த ஆறு பேரில் கார்த்திகா, மீனாட்சி, சுகந்தி மூன்றுபேர் மட்டும் தேர்ச்சி பெறாததால், ஆறு பேருமே படிப்பைக் கைவிடத் தீர்மானித்ததும் இந்தப் படித்துறையில்தான்.

ஒருமுறை குளத்தில் யாருமில்லாத நேரம் பார்த்து சகுந்தலா, குளக்கரையோரமாக நடந்து ஆண்கள் படித்துறைக்குச் சென்றாள். அவள் எதிர்பார்த்துச் சென்றது, தன்னைப் போலவே பேச்சிமுத்துவும் படிகளில் தன் பெயரைச் செதுக்கியிருப்பார் என்றும், அதனைப் பார்த்து ரசித்து அதன் அருகில் அவர் பெயரை எழுதிவிட வேண்டும் என்றுதான். வழக்கமாக, பேச்சிமுத்து அமர்ந்து துவைக்கும் இடத்துக்குச் சென்று அங்கு தன் பெயரைத் தேடினாள். வெகு நேரம் கழிந்தபின் அவளது கண்களுக்குத் தட்டுப்பட்டது சிறிய ஓர் எழுத்துதான். அது ஒரு பெயரின் முதல் எழுத்து. 'ந'.

இங்கிலாந்தில் 1696ல் 'ஜன்னல் வரி' என்ற வரி அறிமுகப்படுத்தப்பட்டது. ஒவ்வொரு வீட்டிலும் பத்துக்கும் மேற்பட்ட ஜன்னல்கள் இருந்தால் வரி வசூலிக்கப்பட்டது. இந்த முறை 1851ம் ஆண்டு வரை இருந்தது.

- மஞ்சுதேவன்
அயிரோலி




நகர வாழ்க்கையின் இரவுத் தூக்கங்களில் எப்போதேனும் குளம் பற்றிய கனவுகள் அவளுக்கு வருவதுண்டு. தனிமையில் நீந்தி நீந்தி ஆண்கள் படித்துறையை அடைந்து, அங்கே பேச்சிமுத்துவோடு படியில் அமர்ந்து பலமணி நேரம் பேசிக்கொண்டிருப்பது போலவும், பேச்சிமுத்து தனக்குக் கிடைக்காததற்காக அடங்காத் துயர்கொண்டு தற்கொலை செய்துகொள்ள நீரினுள் மூழ்கி அடியாழத்துக்குச் செல்வது போலவும், குளத்தின் தரைத்தளத்தில் பேச்சிமுத்துவும், நளினியும் கைகோத்து உலாவிக் கொண்டிருப்பதைப் பார்த்தபின் தனது தற்கொலை முடிவினை மாற்றிக் கொண்டு நளினியைக் கொலை செய்யத் திட்டமிடுவது போலவும், பெண்கள் படித்துறையில் தன் தோழியர்கள் அனைவரும் அவரவர் கணவன்மார்களோடு சேர்ந்து அமர்ந்திருப்பது போலவும், அந்தக் கணவன்மார்கள் அனைவருமே பேச்சிமுத்துவாக இருப்பதுபோலவும், இப்படிக் காணும் கனவுகள் பெரும்பாலும் மறுநாள் வேலைகளின் ஒழுங்கைக் குலைத்து விடும்.

சாலையிலிருந்து விலகி, புதர்கள் மண்டியிருந்த நிலப்பரப்பைக் கடந்து பெண்கள் படித்துறையை நெருங்கியபோது அவள் பார்த்தது, ஆழமில்லாத நீருமில்லாத ஒரு பெருஞ் சதுரக் கிணறு போன்ற வெற்றிடத்தைத்தான். மூன்றே வாரங்களுக்குள் தன் வாழ்நாளிலேயே பார்த்திராத ஒரு பெரும் மாற்றம் நிகழ்ந்திருப்பதனை அவளால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. அங்கு நிற்கத் துணிவின்றிச் சாலைக்கு வந்தாள். தன் அம்மாவையும், தேவியையும் பார்க்க மனமின்றி பொய்கைக்கரைப்பட்டி விலக்கு நோக்கி ஹேண்ட்பேக் துடித்திட வேகமாக நடக்கத் தொடங்கினாள். இரகசியங்கள் அனைத்தும் தீர்ந்துவிட்ட மனம்போல, குளம் தன்னைத் திறந்தபடி கிடந்தது. ●

# ஓட்ஸ், பார்லி போன்ற உணவுகள் நமது நாட்டுக்குத் தேவையில்லை

நாக்கின் சுவையை மட்டுமே குறிக்கோளாகக் கொண்டு, வயிற்றைக் கெடுக்கும் ரெசிபிகளைச் செய்யக் கற்றுத் தரும் சமையல் நிகழ்ச்சிகளின் மத்தியில், ஆரோக்கியமான வாழ்வுக்குத் தேவையான உணவு வகைகளைப் பற்றிப் பேசுகிறது மக்கள் டி.வி.யின் கைமணம் நிகழ்ச்சி. அதனை வழங்கும் சாமியார் தோரணையிலிருக்கும் ராமசுப்பிரமணியத்துடன் ஒரு சுவையான சந்திப்பு...



''இயற்கை உணவுகளைப் பற்றி நான் அதிகம் தெரிந்து கொண்டது மதுரை காந்தி மியூசியத்தில் உள்ள தமிழ்நாடு இயற்கை மருத்துவச் சங்கத்தின் மூலமாகத் தான். நாம் பருகும் தண்ணீர் மிகச் சிறந்த கிருமி நாசினி. திரவங்களிலே, தண்ணீர் மட்டும்தான் சுத்தப்படுத்தும் தன்மை கொண்டது. தண்ணீரை அதிக அளவு பருகுவது நல்லது தான். அதே சமயம் சிலரது உடலே நீர் உடம்பாக இருக்கும். அவர்கள் குறைவாகப் பருகுவது நல்லது.

நான் கை மணம் நிகழ்ச்சியின் தொடக்கத்தில் சங்க இலக்கியங்களான குறுந்தொகை, பத்துப்பாட்டு, அகநானூறு, புறநானூறு போன்றவற்றில் உள்ள உணவு பற்றிய செய்திகளைச் சொல்கிறேன். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே எதை உண்ண வேண்டும், எதை உண்ணக்கூடாது என்று இலக்கியங்கள் மூலமாக உலகுக்குச் சொன்னவன் தமிழன். அறுபதுகளின் தொடக்கம் வரை தினை, வரகு, சாமை, சோளம், கம்பு போன்ற உணவு வகைகள் தமிழ்நாட்டில் பழக்கத்தில் இருந்தன.

பின்னர் ஏற்பட்ட பசுமைப் புரட்சியாலும், உணவுப் பஞ்சம் வந்துவிடும் என்ற பய முறுத்தல்களாலும் அரிசியே பிரதானமாகப் பயிரிடப்பட்டது. தமிழனும் ஆரோக்கியமான, பாரம்பரியமிக்க உணவுகளை மறந்து விட்டான்.

பெரும்பாணாற்றுப்படை எனும் சங்க நூலில், அரசன் ஒருவன் தனது படை வீரர்களுக்கும், விருந்தினர்களுக்கும் சக்தியும், உடலுக்கு வலிவும் சேர்க்கக் கூடிய தினையைப் பாலுடன் சேர்த்து வழங்கினான் என்று குறிப்பு வருகிறது. இன்றும் தமிழ்க் கடவுளான முருகனுக்கு, தினை மாவையும், இயற்கையின் அமுதம் என்று சொல்லக் கூடிய தேனையும் படைக்கிறார்கள். பக்தியிலும்கூட நமது முன்னோர்கள் ஆரோக்கியத்தைச் சொல்லியிருக்கிறார்கள். முருகக் கடவுள் இளமையின் அடை



✱ ராமசுப்ரமணியம்

# கடவுளைப் போல இளமையாயிருக்க!

யாளம். தேனையும், தினையையும் உண்ப வர்கள் இளமையோடு நீண்ட நாள் வாழ் வார்கள் என்பது இதன் பொருள்.

இன்றைய தமிழக மக்களின் உணவுப் பழக்கங்களில் ரசாயன பவுடர்களின் துணையோடு பேக்கரி கலாசாரம் பெருகி விட்டது. வெள்ளை சீனியை விஷம் என உலக சுகாதார நிறுவனம் அறிவித்துள்ளது. இதை 'கால்சியம் திருடன்' என்று கூட மருத்துவர்கள் சொல்கிறார்கள். இதற்குப் பதிலாக பனை வெல்லம், கரும்பு வெல்லம் போன்றவற்றைப் பயன்படுத்த லாம்.

ஓட்ஸ், பார்லி போன்ற உணவுகள் நமது நாட்டுக்குத் தேவை யில்லை, நமது தட்ப வெப்ப நிலைக்கு அவை ஏற்றவையும் அல்ல.

அரிசிச்சோற்றை உண்பவர் கள் சமூகத்தில் உயர்ந்தவர்கள். தினை, கம்பு, கேழ்வரகு போன்றவற்றை உண்பவர்கள் சமூகத்தில் பின்தங்கியவர்கள் என்ற எண்ணம் நம்மிடையே உள்ளது. இந்தத் தவறான எண்ணத்தை மாற்றிக்கொண்டால் ஆரோக்கியம் தானாகவே வரும்'' என்கிறார் ராம சுப்பிரமணியம்.

''வாழ்க்கையின் வேகத்திலும், போலி யான கவர்ச்சி யாலும் மரபார்ந்த உணவுகளை நாம் மறந்து விட் டோம். இதை இளைய தலைமுறையினரிடம் கொண்டு செல்வதே கைமணம் நிகழ்ச்சியின் நோக் கம். தமிழனின் 'உணவே மருந்து' என்ற உணவு சித்தாந்தத்தை இன்றைய தலை முறைக்கு அறிமுகப்படுத்துவதே இந்த நிகழ்ச்சியின் நோக்கம்'' என்கிறார் நிகழ்ச்சி யின் தலைமை இயக்குநர் ப்ரியன்.

– ராகவ்குமார்



'கோலங்கள்' தொடரின் இயக்குநர் திருச்செல்வத்திடம்...

**கோலத்தை எப்போ போட்டு முடிப்பீங்க? அடுத்த கோலம் என்ன?**

மே அல்லது ஜூன் மாதத்தில் முடியும். அதற்குப் பிறகு சினிமா டைரக்ஷன். அது முடிந்ததும் மீண்டும் டீ.வி. தொடர். அந்தத் தொடர் ஆண்களின் சிக்கல்களை, பிரச்னையை மட்டுமே மையப்படுத்தி இருக்கும். கோலங் களைப்போல அதுவும் பேசப்படும் தொடராக அமையும்.

– ராகவ்குமார்

# பயணம்



* லாஸ் வேகாஸ்

'கல்கி' வாசகி
திருமதி எஸ்.பாக்யலட்சுமியின்
அமெரிக்கப் பயண
அனுபவங்களின்
குறிப்புகள்...

## லாஸ் வேகாஸ்

அமெரிக்காவின் 'பூலோக இந்திரபுரி' லாஸ்-வேகாஸ். பிரமிக்க வைக்கும் நகரம்! லாஸ்-வேகாஸ் என்பதன் பொருளே 'லாஸ்ட்-வேஜஸ்' (lost wages); பணத்தையெல்லாம் இழக்கும் ஊராம். அங்கு இரவே பகல்; பகலே இரவு!

பிரமிக்க வைக்கும் வண்ண ஒளிவிளக்குக் கோலங்களால் இரவுச் சூரியனாகத் திகழும் பிரம்மாண்டமான ஹோட்டல்களும், ஹோட்டல்களினுள்ளே நிறைந்திருக்கும் சூதாட்ட விடுதிகளும் (கேஸினோக்கள் - casino) பணம் தொலைய வழிகள்.

'லாஸ்-வேகாஸி'ல் உலகின் மிகப் பிரம்மாண்டமான ஹோட்டல் 'எம்.ஜி.எம். க்ரான்ட்' (பயணிகள் தங்குவதற்கு 7000 அறைகள் கொண்டது) அமைந்துள்ளது.

அங்கு ஒவ்வொரு ஹோட்டலும் ஒவ்வொரு கருத்தை வைத்துக் கட்டப்பட்டுள்ளது.

## ஹூவர் டேம்

அமெரிக்காவில் 'கொலராடோ' (Colarado) நதியில் அரிஜோனா (Arizona), நவாடா (Navada) மாகாணங்களை இணைக்கும் எல்லைப் பகுதியில் கட்டப்பட்டுள்ள மிகப் பிரம்மாண்டமான அணைக்கட்டு ஹூவர் டேம்.


* ஹூவர் டேம்

இது உலகின் 35-வது பெரிய ஹைடிரோ-எலக்டிரிக் பவர்-ஜெனரேட்டிங் ஸ்டேஷன்.

நீருக்கடியில், ஐந்நூறு அடி ஆழத்தில், கட்டப்பட்டுள்ளது இந்த அணை.

## சான்ஃபிரான்ஸிஸ்கோ

உலகப் புகழ்வாய்ந்த ஊர் இது! 'தங்கச் சுரங்கம்' தோண்டப்பட்டு, தங்கம் விளையும் பூமியானது 'சான்ஃபிரான்ஸிஸ்கோ.'

இது ஒரு வளைகுடா நகரம். இங்கு கட்டிடங்களின் அமைப்பும், கட்டப்பட்டிருக்கும் விதமும் அந்தக் காலத்து ஆங்கிலப் படங்களை நினைவூட்டும்.

• க்ரூக்கட் ஸ்ட்ரீட்



எஸ். பாக்யலட்சுமி

# சிறையினுள் செல்ல 40 டாலர்!

## க்ரூக்கட் ஸ்ட்ரீட்

மிக மிகக் குறுகலான தெரு. இருபுறமும் வீடுகள். ஒரே ஒரு கார் மட்டுமே செல்ல முடியும். புறங்களில் லேசாக வளையக்கூட முடியாது. ஏற்ற, இறக்கங்களுடன் அமைந்துள்ள அந்தத் தெருவில் பயணிப்பது ஒரு பரபரப்பூட்டும் அனுபவம். அப்படி ஒரு த்ரில் தெரு.

## கோல்டன் கேட்

இதன் மீது காரிலேயே பயணித்தோம். அதன் நீள, அகலமும், விஸ்தீரணமும், உயரமும் வர்ணனைக்கு உட்படாதவை!

## அடுத்தடுத்த ஆச்சர்யம்!

'சிரடெல்லி சாக்லேட்' (Ciradelli) தயாரிக்கும் பகுதிக்குள் நுழைந்தால்... அம்மம்மா... வாய்கொள்ளா இனிப்பு இலவச விநியோகம்! விதவித வடிவங்களில் சாக்லேட்டுகள்... குழந்தைகளாகவே மாறிவிடலாம்.

அடுத்தது... பிச்சைக்காரர்கள்! ஆம்;



* கோல்டன் கேட்

கடந்து குன்றின் அடிவாரத்தையடைந்து மிகவும் நேர்க்குத்தான பாதையில் கடும் குளிரில் மலையேறிப் பார்த்தோம். பெரிய உயரமான கற்கோட்டைகள்! சுற்றிலும் கடல் வேறு; கைதிகள் தப்பிக்கவே முடியாது. ராணுவக் கைதிகளைக் கட்டி வைத்திருந்த உக்கிரமான இரும்புச் சங்கிலியும் அடிவாங்கின கைதிகளின் ரத்தக்கோடுகளும் இன்றும் அகற்றப்படாமல்



* அல்கட்ராஜ் சிறை

அமெரிக்காவிலும் பிச்சைக்காரர்கள் உண்டு. ஏன்? ஜனாதிபதியின் 'வெள்ளை மாளிகை' முன்பு கூட உண்டு. ஆனால், நம்மூர் பிச்சைக் காரர்கள் போலக் கிழிந்த உடையுடன் உலாத்த மாட்டார்கள். நல்ல தரமான உடையணிந்து, கையிலோ, கழுத்திலோ ஒரு போர்டு தொங்கவிட்டிருப்பார்கள். அதில் 'ஐ ஆம் எ பெக்கர்; லெண்ட் மீ எ டாலர்' என்று எழுதப்பட்டிருக்கும். 'அமெரிக்காவில் 'கௌரவப் பிச்சைக் காரர்கள்!'

## அல்கட்ராஜ் தீவு

**ப**த்தாயிரம் ஆண்டுகள் முன்பு - பசிஃபிக் பெருங்கடலின் இடைப் பகுதியில் சிறிய மணற்குன்றாக சான்பிரான் ஸிஸ்கோ வளைகுடாவின் மேற்பரப்பில் தோன்றிய தனிமையான தீவே 'அல்கட்ராஜ் தீவு' (Alcatraj Island).

1898-ல் ஸ்பானிஷ் -அமெரிக்கன் யுத்தம் துவங்கியது. ராணுவக் கைதிகளை, குற்றவாளிகளைச் சிறைப்பிடித்து அடைத்து வைக்க ஒரு சிறைச்சாலை அத்தியாவசியமாயிற்று. அப்போதைய தேவைதான் அல்கட்ராஜ் சிறைச்சாலை, நமது அந்தமான் சிறைச்சாலை போல்.

டிக்கெட் விலை ஒரு நபருக்கு 40 டாலர். சிறிய கப்பலில் பயணப்பட்டு பசிஃபிக்

பாதுகாக்கப்படுகின்றன.

1963ல் 'அல்கட்ராஜ் சிறைச்சாலை' மூடப்பட்டது. இப்போது அது ஒரு சுற்றுலாத் தலம்.

'அல்கட்ராஜ் ஜெயிலின்' வெளிப் புறத்தில் 'Indians Welcome' என்று எழுதப் பட்டுள்ளது. இதைப் பார்த்துவிட்டு நான் மார்தட்டிக் கொண்டேன். என் மகன் என் தலையில் தட்டினான். 'இது நம்மை இல்லை; நேடிவ் இண்டியன்ஸ் ஆஃப் அமெரிக்கா' என்றான். சிவப்பிந்தியர்கள்தான் முதன் முதலில் அமெரிக்காவில் குடியேறியவர்கள். பின்னால் குடியேறிய அமெரிக்கர்களுக்கு, அமெரிக்காவை விட்டுக் கொடுத்து விட்டு விலகிவிட்டதால் அவர்களுக்கு நன்றியாம்.

*(விட்டுக் கொடுத்தார்களா? விரட்டி அடித்தார்களா?)*

# அது நீயே தான்!

ஒரே ஒரு சூரியன்தான் உள்ளது; கையிலே கொஞ்சம் ஜலத்தை எடுத்துக்கொண்டு நல்ல வழுவழுப்பான தரையில் அதைத் தெளித்தால் ஒவ்வொரு முத்து ஜலத்திலும் பிரதி ரூபமாக ஒரு சூரியன் தெரிகிறது. அவை எல்லாம் பிரிந்து பிரிந்து காணப்பட்டாலும் அநேக சூரியன்கள் இருப்பதாக ஆகாது. சூரியன் ஒன்றுதான். அவ்வாறே உலகில் காணும் இத்தனை ஜீவராசிகளுக்குள் சிறியதாக மினுமினுக்கிற அறிவொளி அனைத்தும் ஒரே பிரம்மத்தின் பிரதிபலிப்புத்தான்.

இதைத்தான் ஸ்ரீ ஆதி சங்கராசார்யரவர்கள் ப்ரம்ம ஸூத்திர பாஷ்யத்தில் சொல்லியிருக்கிறார். எல்லாவற்றுக்கும் மூலமாக இருக்கும் அகண்டமான ஒரே சக்தி எதுவோ, அறிவு எதுவோ அந்த எல்லை கடந்த சக்திதான், அறிவுதான் நம்மிடத்தில் ஓர் எல்லைக்குள் பிரிந்து கண்டம் கண்டமாகத் தோன்றுகிறது. அந்த ஒரே வஸ்துதான் வேதத்தின் அந்தத்தில் இருக்கும்படியான தத் (அது) என்பது. 'தத்' என்றால் தூரத்தில் எல்லாவற்றுக்கும் மேலே இருக்கிறதென்று அர்த்தம். நாம் இப்போதிருக்கும் நிலையில் அது தூரத்தில் இருப்பதாகத் தோன்றினாலும், உண்மையில் தூரத்தில் கிட்டத்தில் எல்லாமுமாய் இருப்பது அதுதான். 'அது நீயேதான்' - 'தத்-த்வம்' என்கிறது வேதம்.

– ஜகத்குரு காஞ்சி
காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர
சரஸ்வதி சங்கராச்சார்ய
சுவாமிகள்

அருள்வாக்கு



# துணுக்குத்



## 2 கி.மீ. இடைவெளியில் 4 ஆறுகள்!

"கபிஸ்தலம் - பாபநாசம் இடையில் இரண்டு கி.மீ. தூரம். இந்த இடைப்பட்ட பகுதி வழியாக அடுத்தடுத்து ஆறுகள். மொத்தம் நான்கு ஆறுகள். காவிரி, திருமலைராஜன், அரசலாறு, குடமுருட்டி என மிகக் குறுகிய இடைவெளி தூரத்துக்குள் நான்கு ஆறுகள் அமையப் பெற்றுள்ளன'' என்கிறார் கபிஸ்தலம் இராஜேந்திரன்.

## 130 அடி நீள ருத்ராட்ச மாலை!



''சப்தகிரி ஆங்கில இதழில், வெள்ளொளி விநாயகர் பற்றி நான் எழுதிய கட்டுரை வெளியானது. அதை வாசித்த அமெரிக்காவின் ஹவாய் தீவு ரொனால்ட்ட்டி கீப்பூ என்பவர், என் வீடு தேடி பாபநாசம் வந்து பரிசுப் பொருள் ஒன்றினைத் தந்தார். என்ன தெரியுமா? மிக நேர்த்தியாக அமைக்கப்பட்ட 130 அடி நீளமுள்ள ருத்ராட்ச மாலை. அதனை வீட்டில் வைத்திருக்க எங்களுக்கு மனம் ஒப்பவில்லை. தஞ்சை பெரிய கோயிலின் 1000 ஆண்டு (1994) சதய விழாவில், கோயில் நிர்வாகத்திடம் ஒப்படைத்தோம்; பெரிய கோயில் சிவலிங்கத் திருமேனியில் அலங்கரிக்கப்பட வேண்டும் என்று. ஆனால், அந்த ருத்ராட்ச மாலையினை சுவாமி திருமேனி மீது சாத்தாமல் வைத்துள்ளது கோயில் நிர்வாகம். அது ஏனென்று தெரியவில்லை!'' எனக் கூறுகின்றனர் பாபநாசம் வி.பி.கே. மூர்த்தி - கனகாம்புஜம் தம்பதியினர்.



# தோரணம்



## 'ஏழு லட்சம்' ஜோக்ஸ்!

"அப்பா கொஞ்சம் ஜோக்ஸ் சேமிச்சு என்கிட்டே தந்தாரு. இது என்ன பணமா காசா நகையான்னு அப்ப நானே அசால்ட்டா இருந்தேன். அப்பா செஞ்சதுலயும் ஏதோ ஒரு அர்த்தம் இருக்குன்னு அப்புறமா எனக்குத் தோணிச்சு. அன்றிலிருந்து வருஷம் மாசம் தேதி எழுதிப் பட்டியலிட்டு ஜோக்குகளா சேமிச்சேன். பத்திரிகையில வர்ற ஜோக்குகளை வெட்டி எடுத்து ஒட்டி சேகரிச்சேன். சுமார் ஏழு லட்சம் ஜோக்குகளுக்கும் மேல என்கிட்ட இருக்கு. அத்தனையும் எந்தப் பத்திரிகை, என்ன தேதின்னு விவரம் வெச்சிருக்கேன்!" என்கிறார் தஞ்சை டொமினிக் சேகர். மேலும் ஒரு கொசுறு தகவல்: டொமினிக் சேகர் அம்மா பெயர் மேரி. மேரி என்கிற நாலு எழுத்தினை ஒரு போஸ்ட் கார்டில், மைக்ரோ டிப் 0.2 பென்சில் கொண்டு 1 லட்சம் எழுத்துகள், (இருபத்தைந்தாயிரம் பெயர்) இருபத்தைந்து மணி நேரத்தில் எழுதி முடித்துள்ளார்.

**செய்தி தொகுப்பு: ஸ்ரீ அரசு**

## அவன்தான் வீரன்



நெப்போலியன் ஒருமுறை தன்னுடைய தளபதியின் இல்லத்துக்குச் சென்றான். தளபதியோ தன் மனைவி மக்களோடு உரையாடிக் கொண்டிருந்தான். நெப்போலியனைக் கண்டதும் தளபதி சட்டென மரியாதையோடு எழுந்தான்.

அப்போது நெப்போலியன், "உங்களுடைய பிள்ளைகளுக்கு உங்களை விட உயர்ந்தவர்கள் வேறு எவருமில்லை. அதனால் அவர்கள் எதிரில் எழுந்து எனக்கு மரியாதை செய்ய வேண்டாம்" என்று தளபதியை அமரவைத்து, தானும் அவரோடு அமர்ந்து பேசினான்.

- திருவைகாவூர் முருகானந்தம்



# மருதன்

கவிதைகள் பிடிக்கும். கதைகள் பிடிக்கும். கட்டுரைகள் பிடிக்கும். என்றாலும், எல்லாவற்றையும்விட மனிதர்களை நையாண்டி செய்வது மிகவும் பிடிக்கும் மார்க் ட்வைனுக்கு. அவர் ஒரு முழு நேர நையாண்டிக்காரர். அரசியல்வாதி, எழுத்தாளர், சீர்திருத்தவாதி, வாத்தியார், அப்பா, அம்மா, காதலி, பாதிரியார், பரலோகத்தில இருக்கும் பரமபிதா - எவரையும் விட்டு வைத்ததில்லை ட்வைன். பிடித்து இழுத்து வந்து முச்சந்தியில் நிறுத்தி, வேண்டிய மட்டும் பரிகாசம் செய்துவிட்டு, கிழித்து தோரணம் கட்டிவிட்டுத்தான் மறுவேலை.

ட்வைனின் பல படைப்புகள் அவர் காலத்தில் தடை செய்யப்பட்டிருந்தன. குறிப்பாக, The Adventures of Tam Sawyer (1876), The Adventures of Huckleberry Finn (1884) ஆகிய நாவல்களைப் படித்தவர்கள் திரைப்படக் கதாநாயகியைப் போல் புறங்கையால் வாயை மூடி அலறினார்கள். பேச்சு வழக்கைப் பயன்படுத்தி முதலில் எழுதப்பட்ட நாவல்கள் இவை என்பதுதான் காரணம். இப்படியெல்லாம் கூடவா எழுதுவார்கள், ஒரு ஒழுங்கு வேண்டாமா என்று ஒதுக்கித் தள்ளினார்கள் வாசித்தவர்கள். இதே ரீதியில் போனால் அமெரிக்காவில் இருந்து வெளிவரும் எந்தவொரு புத்தகத்தையும் உலகம் சீண்டாது; இது அமெரிக்காவின் அவமானம் என்றன விமர்சனங்கள்.

'நான் மார்க் ட்வைன் படித்தேன்' என்று வெளியில் சொன்னாலே, சீச்சீ என்னை நெருங்காதே என்று விலகிக் கொண்டனர் அமெரிக்கச் சீமான்களும் சீமாட்டிகளும். திருப்பிக் கேட்டார் ட்வைன், 'இதிலென்ன தவறு, நாம் பேசப் பயன்படுத்துவதும் மொழிதானே? அதைப் பயன்படுத்துவதில் என்ன தயக்கம்?' மனிதர்களைக் கண்டாலே ட்வைனுக்கு நகைப்பு வந்ததற்குக் காரணம் இதுதான். போலியான கௌரவம். போலியான நாகரிகம். போலியான சடங்குகள், சம்பிரதாயங்கள். எல்லாவற்றுக்கும் ஒரு புனித பிம்பம்.



**என் புத்தகங்கள் தண்ணீர். பிற எழுத்தாளர்களின் புத்தகங்கள் பழரசம். எல்லோரும் பழரசம் அருந்துவதில்லை. ஆனால் எல்லோரும் தண்ணீர் குடிக்கிறார்கள்.**

அமெரிக்காவைக் கண்டுபிடித்தது உண்மையிலேயே அருமையான விஷயம். அதை எப்படியாவது தொலைத்து விட்டால் இன்னும் அருமையாக இருக்கும் என்று எழுதிய ட்வைன் இன்னொரு முறை இப்படி எழுதினார்: 'எல்லாரும் இதைத்தான் செய்தார்கள்; ஆகவே நான்

இதைச் செய்கிறேன் என்று சொல்பவன் ஆங்கிலேயன். இதற்கு முன்னால் யாரும் இப்படிச் செய்ததில்லை; ஆகவே நான் இப்படிச் செய்கிறேன் என்று சொல்பவன் அமெரிக்கன்.'

ட்வைன் எழுதிய, பேசிய விஷயங்களில் இருந்து எண்ணற்ற சுவையான, அங்கதமான வாக்கியங்களைப் பிரித்தெடுத்து ரசிக்க முடியும். சில உதாரணங்கள்:

★ முதலில் உண்மையைக் கண்டறிந்துவிடுங்கள். அதற்குப் பிறகு உங்கள் இஷ்டம் போல் அதை மாற்றிக் கொள்ளலாம்.

★ ஆதாமுக்கு நாம் நிச்சயமாக நன்றி சொல்லவேண்டும். மரணத்தை முதன் முதலில் கொண்டு வந்தவர் அவர்தான்.

★ இயேசுநாதர் இன்று உயிருடன் இருந்திருந்தால், நிச்சயம் கிறிஸ்தவராக இருந்திருக்க மாட்டார்.

★ புகைப்பிடிப்பதை நிறுத்துவது மிகவும் சுலபமானது. நானே இதற்கு முன்னால் ஆயிரம் தடவை நிறுத்தியிருக்கிறேன்.




# எல்லோரும் தண்ணீர் குடிக்கிறார்கள்!

★ இனிமையாக இருக்க வேண்டுமானால் சொர்க்கத்துக்குச் செல்லுங்கள். துணைக்கு நண்பர்களும் வேண்டும் என்று விரும்பினால் நரகத்துக்குச் செல்லுங்கள்.

★ முட்டாள்களுக்கு நன்றி சொல்லுங்கள். அவர்கள் மட்டும் இல்லாவிட்டால் நம்மால் வெற்றி பெற்றிருக்கவே முடியாது.

பின்னாட்களில், அமெரிக்க இலக்கிய உலகம் தன் பீடத்தில் மார்க் ட்வைனை நிறுத்திப் பார்த்துப் பெருமைப்பட்டுக் கொண்டது தனி விஷயம். ஹக்கிள்பெரி ஃபின் என்னும் ஒரே ஒரு நாவலில் இருந்துதான் அமெரிக்க நாவல்கள் அனைத்தும் உற்பத்தியாயின என்றார் எர்னஸ்ட் ஹெமிங்வே.

தன் புத்தகங்களைப் பற்றிய மார்க் ட்வைனின் விமர்சனம் இது. 'என் புத்தகங்கள் தண்ணீர்! பிற எழுத்தாளர்களின் புத்தகங்கள் பழரசம். எல்லோரும் பழரசம் அருந்துவதில்லை. ஆனால், எல்லோரும் தண்ணீர் குடிக்கிறார்கள்.'

வந்தவர் : இளஞ்செழியன் அரியணை யில் அமர்ந்த பிறகு ''இளஞ்செழியனே இனி'' என்று ஈற்றடி கொடுத்து வெண்பா போட்டி அறிவித்து விடலாம். ஆழி சூழ் உலகை வாழ வைக்கும்

வந்தவர் : சுவடிகளில் எழுதப்பட் டதை, கல்வெட்டுகளாக, மெய்க்கீர்த்தி களாக நமது அமையப் போகும் அரசின் அதிகாரிகள் மாற்றி விடுவார்கள். மெய்க் கீர்த்திகளில் எத்தனை பொய்க்

# ஓசை சங்கிலி!

• வே.எழிலரசு •

திருமாலின் தொப்புள் கொடியின் தொடர்ச்சிதான் நமது மன்னர் இளஞ்செழி யர் - என்று புலவர்கள் ஆதாரங்களை ஆயிரமாயிர மாய்க் கொண்டு வருவார் கள்.

முல்லையூரார் : அப் படியா! புலவர்கள் பொய் சொல்லமாட்டார்கள் என் றல்லவா நான் அறிந்து வைத்திருக்கிறேன்!

வந்தவர் : அதெல்லாம் அந்தக் காலம் நண்பரே. இப்பொழுதெல்லாம் விருதுகள் தங்கள் படைப்பு களுக்கே கிடைக்க வேண் டுமென்பதற்காக இவர்கள் நடத்தும் அரசியல் நமது அரசியலையும் மிஞ்சுவ தாகிவிட்டது.

கூகையார் : அமைச் சரே! தாங்கள் உரைத்தது போல் காவியங்கள் பல இயற்றப்பட்டாலும் - வரலாறு ஒப்புக் கொள்ள வேண்டுமே... ஓலைச் சுவடியில் எழுதிவிட்டால் போதுமா?




கீர்த்திகள் என்று யாரும் ஆய்வு செய்யப் போவதில்லை கூகையாரே! நீங்கள் ஒன்றைப் புரிந்து கொள்ள வேண்டும்.

## நாடகம்

வரலாறு என்பதே புனைவுகளின் நம்பகத் தொகுப்புதான். புனைவு என்பது உண்மையின் எதிரி அல்ல. மாறாக உண்மையின் ஒப்பனை. எதையும் அழகுபடுத்திப் பார்ப்பது நமது பாரம்பரியத்தின் பண்பாடு. நாம் பிணங்களைக்கூட அழகான தாழிகளில் வைத்துதான் புதைக்கிறோம். மறந்துவிடாதீர்கள். உம் ஒரு முக்கியமான விஷயத்தைச் சொல்ல மறந்துவிட்டேன். நமது அடுத்த கட்ட நடவடிக்கைக்கு முன்னதாக குன்றத்தூர் அடிகளாரைச் சந்தித்து விடுங்கள். மரியாதை நிமித்தமாக என்று சொல்லப்பட்டாலும், காரிய நிமித்தமாக அவர் காதிலும் சில செய்திகளைப் போட்டு விடுங்கள். நானும் அவரைச் சந்திக்கிறேன்.

**முல்லையூரார் :** நமது அரசியல் சதுரங்க விளையாட்டில், சமயத் துறவியான அடிகளாரின் பங்களிப்பு... என்ன...? எனக்குப் புரியவில்லையே!

**வந்தவர் :** அடிகளாரின் மீது மக்களுக்கு மிகுந்த மதிப்பு இருக்கிறது. எனவே அவரின் ஆசிகள் அமையப் போகும் நமது அரசுக்கு இருக்கிறது என்பதான ஒரு தோற்றத்தை உருவாக்க வேண்டும். நான் அடிகளாரைச் சந்தித்து உரையாடிய பின்பு நீங்கள் சந்தியுங்கள். நான் புறப்படலாம் அல்லவா? அடுத்த சந்திப்பு எங்கே எப்பொழுது என்பது தெரிவிக்கப்படும். (அமைச்சர் தன் இடுப்பில் முடிந்திருக்கும் முடிச்சிலிருந்து ஒரு சின்ன பட்டுத் துணி முடிச்சை எடுக்கிறார். அதிலிருந்து ஒரு முத்திரை மோதிரத்தை எடுத்து நீட்டி) கூகையாரே... இதைப் பெற்றுக் கொள்ளுங்கள், நமது திட்டங்களைச் செயல்படுத்தும்போது

ஏற்படும் செலவுகளைச் சமாளிக்க அரசாங்கக் களஞ்சியங்களிலிருந்து பொற்காசுகளை வரவழைப்பதற்கான கடவாக இது பயன்படும்.

*(கூகையார் அதைப் பெற்றுத் தனது முடிச்சில் பத்திரப்படுத்த)* நான் புறப்பட்டு ஒரு நாழிகை கழித்தே நீங்கள் இருவரும் புறப்படுங்கள். எப்படியும் விடிவதற்குள் நான் அரண்மனையை அடைந்தாக வேண்டும்.

**முல்லையூரார் :** விடிவதற்குள்ளாகவா..? இதோ பக்...

*(கூகையார், முல்லையூராரின் வாயைத் தமது கையினால் பொத்துகிறார். அமைச்சரின் புரவி புறப்பட்ட பின்பே, பொத்திய தம் கையை எடுக்கிறார்)*

**முல்லையூரார் :** ஏன் என்னைப் பேச விடாமல் தடுத்து விட்டீர்கள்?

**கூகையார் :** இதோ! இந்தக் காட்டிலிருந்து ஒரு காதம் கடந்தபின்பு வைகை நதிக்கரையோரம் வரும். நதியோரமாகவே ஒரு கல் பயணித்தால் மூதூர் வரும். மூதூரின் இடைக் கழியில் நதியின் குறுக்காகக் கட்டப்பட்டுள்ள மூங்கில் பாலத்தைக் கடந்தால் நகருக்குள் நுழைந்து விடலாம். நகருக்குள் நுழைந்தால் கூலம் குவித்த கூலவீதி வரும். பின்பு பட்டுச் செறிந்த பன்னூறு துகில்வீதி, பின்பு, அடுத்தடுத்து உள்ள பொன்மிகு கடைவீதி, ஒளி பல விளைக்கும் நவரத்தினக் கற்கள் வீதி, அரசர்கள் அவாவும் அங்காடி வீதி, ஆடல்களால் கண்களையும் பாடல்களால் செவிகளையும் முற்றுகையிட்டு நம் அகவாழ்வின் கோட்டைகளை வெற்றி கொள்ளும் அணங்குகள் உலவும் பண் கலைஞர் வீதி - இவற்றைக் கடந்த பின்பு அரண்மனைக்கார வீதி. ஆக மிகக் குறைவான தூரப் பயணத்துக்காக ஏன் விடிவதற்குள் என்று அமைச்சர் சொல்ல வேண்டும் என்றுதானே கேட்க விரும்பினாய்?

**முல்லையூரார் :** ஆமாம்...

**கூகையார் :** அமைச்சர் மூதூர் வழியாகப் பயணிக்க மாட்டார்.

**முல்லையூரார் :** ஏன்?

**கூகையார் :** அமைச்சர் இங்கே வந்ததும் அந்த வழியாக அல்ல.

**முல்லையூரார் :** அதுதான் ஏன்?

**கூகையார் :** இந்தச் சுருக்கு வழியில்... அதாவது மூதூரின் கிழக்கே உள்ள சிறு குன்றில் கானுறை தெய்வம் குடிகொண்டுள்ளது. மூதூரின் மேற்கே பரந்து விரிந்த தாமரைப் பொய்கையில் மூன்று இசக்கிகள் இரவுகளில் நீர் பரப்பின் மீது நடனமாடிக் கொண்டிருப்பார்கள். கபடுகள்

# பணத்தைக் கொடு!



அம்பேத்கரிடம் பணத்தைக் கடன் வாங்கிய நண்பர் ஒருவர் அவரிடம் பழகும்போது, பேசும் போதெல்லாம் சங்கடத்தில் நெளிந்தார். அதைப் புரிந்துகொண்ட அம்பேத்கர், "கடனுக்கும் கருத்துக்கும் சம்பந்தமில்லை. என் கருத்து தவறு என்றால் தைரியமாய் மறுத்துப் பேசு. முடியவில்லை என்றால் என்னிடம் கடன் வாங்கிய பணத்தைத் திருப்பிக் கொடுத்து விடு" என்றாராம்.

- ஆர்.ராஜலட்சுமி,
விழுப்புரம்

நிறைந்தவர்கள் அந்தத் திசைகளின் ஊடே செல்லவும் அஞ்சுவர்.

**முல்லையூரார் :** அமைச்சர் கருத்தில் தெளிவு பெற்றவர் என்பதான தோற்ற மயக்கத்தை அவரது உரையாடல் ஏற்படுத்தியதே. அவருக்குக் கூடவா இது போன்ற விஷயங்களில் நம்பிக்கைகள் உண்டு?

**கூகையார் :** நம்பிக்கை உண்டோ இல்லையோ நானறியேன். ஆனால் அச்சம் உண்டு.

**முல்லையூரார் :** அச்சமா அமைச்சருக்கா?

**கூகையார் :** ஆமாம். பொய்யும் சூதும் களவும் நம்பிக்கை துரோகமும் எண்ணங்களில் சூல் கொண்டுள்ள எல்லோருமே அஞ்சுபவர்கள்தான்.

*(முல்லையூரார் சில நொடிகள் அமைதி காத்துவிட்டு, தயக்கத்துடன்)*

**முல்லையூரார் :** கூகையாரே, நான் ஒன்று சொன்னால் தவறாக நினைக்க மாட்டீர்களே!?

**கூகையார் :** நீர் நினைத்ததைப் பேசுவதற்கு உரிமை படைத்தவராயிற்றே. உம் உதடுகளை யாரால் ஒட்டி வைத்திருக்க முடியும்? தயங்காமல் சொல்லும்.

**முல்லையூரார் :** இப்பொழுது அமைச்சரை சூத்ரதாரியாகக் கொண்டு நிகழ்கின்றவை துரோக அரசியல் என்றால், அதற்கு நீங்களும்தானே துணை போகிறீர்கள்?

**கூகையார் :** இல்லை... நிசப்தமாக நான் நிகழ்த்திக் கொண்டிருக்கும் அரசியல் வெற்றி பெற வேண்டுமென்பதற்காக இந்தத் துரோக அரசியலுடன் கூட்டணி அமைத்துள்ளேன்...

**முல்லையூரார் :** உங்கள் அரசியலா...? புரியவில்லையே!

**கூகையார் :** உமக்குப் புரியாது. (ஒரு நீண்ட பெருமூச்சுடன்) அது ஒரு பெரும் வரலாறு. இதோ இன்றைக்கு அரியணையில் அமர்ந்திருக்கிறானே பாண்டியன் நெடுஞ்செழியன் - அவனது பெரும்பாட்டன் எனது பாட்டனிடம் இருந்து, எங்கள் குன்றை வென்று எங்கள் குலம் கெடுத்தான். நாங்கள் எங்கள் குலமரபுகளையும் வாழ் கலைகளையும் இந்தப் பேரரசிடம் இழந்து விட்டிருக்கிறோம். அதை நாங்கள் மறந்து விடக் கூடாது என்பதனால்தான் எங்கள் குலப் பெண்கள் இழவு வீடுகளில் அதை ஒப்பாரிகளாகப் பாடுகிறார்கள். அந்தப் பாடல்களின் அர்த்தமும் வலியும் எங்களால்தான் முழுமையாக உணர முடியும். என்னைப் போல பல வேளிர்கள் பழி வாங்கக் காத்திருக்கிறோம். பன்னெடுங்காலமாக. இந்தப் பாண்டி நாடு பேரரசாக நிலைத்திருக்கும் நாள்வரை எங்கள் கனவுகள் மனச்சிமிழ்களுக்குள் தான் இருந்தாக வேண்டும். எனவே பேரரசைப் பலமிழக்கச் செய்யும் எல்லாவிதமான அரசியலுக்கும் என்னுடைய துணை உண்டு. மனச்சிமிழை விட்டுக் கனவுகள் வெளியே வந்து நனவுகளாக வேண்டுமல்லவா?

**முல்லையூரார் :** அட... அரசியலுக்குள் உள் அரசியலா?

**கூகையார் :** ஆமாம். இன்னும் எவை



யெல்லாம் நிகழப் போகின்றன என்பதை நீர் பார்க்கத்தானே போகிறீர்... இந்தப் பேரரசில் (ஏதோ நினைத்தவராக)

சரி... சரி... நாம் புறப்படலாம்.

(புரவிகளில் அவர்கள் இருவரும் ஏறி அமர... புரவிகள் புறப்படுகின்றன.)

**காட்சி - 3**

**இடம் : குன்றம் அடிகளாரின் ஆசிரமம்.**

*(அமைச்சர் ஆசிரமத்துக்குள் கை கூப்பியபடி நுழைய - அடிகளார் முன் னோக்கி நடந்து வந்து வரவேற்கிறார்.*

*அமைச்சரை அழைத்துச் சென்று தக்க இருக்கையில் அமர வைக்கிறார். பணியாள் ஒருவர் வெள்ளித் தட்டொன்றில் பழ*




*நறுக்குகளும், குவளையில் பாலும் கொணர்ந்து வைக்கிறார்.)*

**அடிகளார் :** இந்த ஏழையின் குடிசைக்கு சரிவ வல்லமை படைத்த பாண்டி நாட்டின் தலைமை அமைச்சர் வருகை தந்திருப்பது வியப்பேற்படுத்துகிறது.

**அமைச்சர் :** அடிகளாரே... சில நாட்களாக நான் தூக்கமில்லாது தவிக்கிறேன். மன உளைச்சலுக்கு உள்ளாகித் தவிக்கிறேன்.

**அடிகளார் :** (மிகுந்த கரிசனத்துடன்) ஏன்? என்ன காரணம்?

**அமைச்சர் :** அடிகளாரே! தாங்கள் அறியாதது அல்ல. நமது மன்னரின் செல்வ வளத்துக்கு நிகராகச் செல்வம் படைத்த பெரு வணிகர்கள் பலர் வேற்று சமயங்களைத் தழுவி விட்டனர். அதனால் மாற்று சமயங்களைச் சேர்ந்தவர்களின் கோயில்களும் பெருகுகின்றன.

**அடிகளார் :** அதனால் என்ன? அமைச்சரே! மானுட விடுதலைக்காக மகான்கள் சிலர் கண்டடைந்த 'தத்துவங்கள்' என்னும் தேன் சுரபியை உள்ளடக்கிய அழகான மலர்கள்தான் சமயங்கள். இங்கே ஆயிரம் பூக்கள் பூக்கட்டுமே. மானுடம் இன்னும் எழில் கூடி மிளிரத்தானே செய்யும்? இதில் உங்களுக்கு என்ன கவலை?

*(அமைச்சர் சிறிது நேரம் அமைதி காக்கிறார். என்ன இவர் சமரச சன்மார்க்க வாதியாயிருக்கிறாரே என்று எண்ணமிடுகிறார். திடீரென்று ஒளி பெற்றவராக...)*

**அமைச்சர் :** அடிகளாரே ஒரு ரகசியச் செய்தி. மன்னர்கூட மாற்று சமயத்தைத் தழுவ உத்தேசித்திருக்கிறார்.

*(இப்பொழுது அடிகளார் முகத்தில் வேதனையின் ரேகைகள் படர்கின்றன. தனது நீண்ட தாடியை வருடியவாறு, கண்களை மூடி 'வேலவா' என்று முணு முணுக்கிறார்)*

(தொடரும்)


நெஞ்சு ஒன்னுமில்ல!
நான் சொல்வதை நன்றாக எண்ணிப் பாருங்க... அப்பதான் உண்மை புரியும்...!
நல்லாத்தான் எண்ணிப் பார்த்தோம்... இதுவரை 10 சோடா குடிச்சிருக்கீங்க...!
'குலசை' க.மீ.நஜ்முதீன்

# 13 ஹாய் டார்லிங்!

ஆரோக்கியமான குடும்ப உறவுக்காக இன்னும் சில டிப்ஸ்:

திருமணமானவுடன் புது மருமகளின் பெற்றோர்களிடம், ''இனிமேல் இவ எங்க மருமகள் இல்லை; எங்களோட மகள்'' என்று சொல்வதும், பெண் வீட்டார் தங்கள் மாப்பிள்ளையை, ''எங்கள் மகன் மாதிரி'' என்று கொண்டாடுவதும் வெகு சகஜம். ஆனால் ஒரு யதார்த்தத்தைப் புரிந்து கொள்ளுங்கள்; மாமியார் என்றைக்கும் அம்மா ஆக முடியாது. மருமகள் மகளாவதும் சாத்தியமில்லை; பிள்ளையும், மாப்பிள்ளையும் எப்படி ஒன்றாக முடியும்? குடும்பத்தில் அவரவர்களுக்கென்று ஒரு பொறுப்பு உள்ளது. முதலில் எல்லோரும் மனிதர்கள்; அன்புதான் குடும்பத்தின் பிரதான மொழி என்று அனைவரும் கடைப்பிடித்தால், உறவுகள் எந்தவிதமான சிக்கல்களும் இல்லாமல் சீராக இருக்கும்; பந்தம் இறுகும்.

திருமணமானவுடன் கணவன் - மனைவிக்கிடையே நடைபெறும் உரையாடல்களில் அவரவர்களுக்குரிய பிரத்யேகமான விருப்பு, வெறுப்புகள் குறித்த கருத்துப் பரிமாற்றங்கள் இருக்கும். உதாரணமாக, லட்சுமி, தன் கணவன் பார்த்திபனிடம், ''நீங்கள் ஒரு பிசினஸ் மேன் என்று தெரிந்துதான் நான் உங்களைத் திருமணம் செய்துகொண்டேன். ஆனால், நீங்கள் உங்கள் பிசினஸ் பிரச்னைகளை தயவுசெய்து வீட்டுக்குக் கொண்டுவந்து என்னை டென்ஷன் ஆக்கக் கூடாது. உங்க டென்ஷனால என் உடம்பைக் கெடுத்துக் கொள்ள விரும்பவில்லை'' என்று சொல்லி விட்டாள்.

உடனே, ''பிசினஸ் பண்றவங்களுக்குப்





பிரச்னை இருக்கத் தான் செய்யும்; அதை உங்கிட்டே சொல் லாம, பக்கத்து வீட்டுக்காரி கிட்டேயா போய்ச் சொல்ல முடி யும்?'' என்று பார்த்திபன் எரிந்து விழ வில்லை. அமைதியாக அவள் சொன்ன

புரிந்துகொள்ள வேண்டும். அது ஆணானா லும் சரி, பெண்ணானாலும் சரி 'நான் ஏன் என் தனித்தன்மையை இழக்க வேண்டும்? நான் ஏன் விட்டுக் கொடுக்க வேண்டும்?' என்று முரண்டு பிடிக்காமல், அடுத்தவரது தனித்தன்மைக்கு உரிய அளவு முக்கியத் துவம் கொடுத்து, வாழ்க்கையை மகிழ்ச்சிப் பாதையில் நடத்திச் செல்வது எப்படி என்றுதான் பார்க்க வேண்டும்.

''என்னைப் பற்றி என்ன வேணும்னா லும் சொல்லு; ஆனா என் குடும்பத்தைப் பற்றி எதுவும் பேசாதே'' - இது கணவன், மனைவிக்கு இடையிலான வாக்குவாதங் கள், சண்டைகளின்போது வழக்கமாகச்

# சுதந்திரம் கொடுக்க நீ யார்?

தைக் கேட்டுக் கொண்டு, தலையசைத்தான். கடைப்பிடித்தான். இரண்டே வருஷங்கள் தான் ஆகியிருக்கும். லட்சுமி - பார்த்தி பனுக்கு இடையில் புரிதலும், நெருக்கமும் வளர்ந்ததன் பலன், இப்போது தினமும் காலை இரண்டு மணி நேரம் பார்த்திபனு டைய ஆபீசுக்குச் சென்று சில பொறுப்பு களைப் பகிர்ந்துகொள்கிறாள் லட்சுமி. நாம் சொல்லிப் புரியவைக்க சிரமமான விஷயங் களை, காலம் சுலபமாகப் புரியவைத்து விடும்.

திருமணம் என்பது இரண்டு தனி நபர்கள் தங்களுடைய தனித்தன்மையை இழந்துவிடாமல், ஒரு புதிய அத்தியாயத் தைத் துவக்குதல் என்பதைத் தெளிவாகப்

**டாக்டர் விஜய் நாகஸ்வாமி**

சொல்லும் ஒன்று. அப்படியென்றால் மனைவி, இன்னமும் தான் பிறந்த குடும் பத்தைத்தான் தன் குடும்பமாக நினைக் கிறாள்; கணவன் திருமணம் செய்து கொண்ட பிறகும், அவளைத் தன் குடும்பத் தில் ஒருவராக ஏற்றுக் கொள்ளவில்லை என்றுதானே அர்த்தம். யாரும் யாரைப் பற்றியும் தவறாகப் பேசக்கூடாது என்கிற போது, என்னைப் பற்றி தவறாகப் பேச லாம்; என் குடும்பத்தைப் பற்றிப் பேசக் கூடாது என்று சொல்வது எத்தனை விசித் திரம்?

திருமணமானதும் தனிக்குடித்தனம் போய்விடுவது நல்லது என்று இப்போது பலரும் நினைக்கிறார்கள். அது முற்றிலும் சரி என்று சொல்ல முடியாது. பிரச்னை களுக்குக் காரணம் நாம் வாழும் இடம்

அல்ல; நமது மனம்!

ஒவ்வொருவருக்கும் அது கணவனாலும் சரி, மனைவியானாலும் சரி, அவர்களுக்குள்ளே எவ்வளவுதான் புரிதலும், நெருக்கமும் இருந்தாலும் கொஞ்சம் இடைவெளியும் அவசியம். சாரங்கனுக்குத் தன் மனைவி ராகினி மீது பிரியம் உண்டு. ஆனால் அவனது செயல்கள் ராகினிக்கு எரிச்சலூட்டும். அவன் ஆபீசிலிருந்து வீடு திரும்பும் சமயத்தில், ராகினியும் வீட்டுக்கு வந்திருக்க வேண்டும் என எதிர்பார்ப்பான். லேட்டாகும் என்றால் அதை முன்கூட்டியே அவனுக்குச் சொல்லிவிட வேண்டும்; அவளது பேங்க் பாஸ் புக் அவனிடம்தான் இருக்க வேண்டும்; ராகினி தன் ஆபீஸ் சகாக்களின் டிரான்ஸ்ஃபர், பர்த்டே சமயங்களில் கூட அவர்களுடன் ஓட்டலுக்கு லஞ்சுக்கோ, டின்னருக்கோ போகக்கூடாது. 'நீ ஓட்டலுக்குப் போகணும்னா என்கிட்டே சொல்லு அழைச்சுக்கிட்டுப் போறேன்' என்பான். ராகினியின் மெயில் அட்ரஸுக்குரிய பாஸ்வேர்டு என்ன என்று கேட்ட போது, அவள் தன் பொறுமை இழந்து கத்திவிட்டாள். 'கணவன் மனைவி இருவருக்கும் நல்ல அண்டர்ஸ்டாண்டிங்கும் நெருக்கமும் இருக்கவேண்டியது மிகவும் அவசியம்தான்; அதே சமயம் அவரவர்க்குரிய சுதந்திர வட்டத்துக்குள் அடுத்தவர் மூக்கை நுழைக்கக்கூடாது' என்பதைப் புரியவைத்தேன். அப்புறம் அவர்களுக்கிடையிலான உறவுச் சிக்கல் மறைந்து, சகஜமானது.

**''என்னைப் பற்றி என்ன வேணும்னாலும் சொல்லு, ஆனா என் குடும்பத்தைப் பற்றி எதுவும் பேசாதே''**

சில ஆண்கள் இருக்கிறார்கள். அவர்கள், 'என் மனைவிக்கு நான் முழுச் சுதந்திரம் கொடுத்திருக்கிறேன்' என்று பெருமையாகச் சொல்வார்கள். அவர்களுக்கு என் கேள்வி, 'நீங்கள் ஒரு கணவராக இருந்தாலும், உங்கள் வாழ்க்கைத் துணைக்குச் சுதந்திரம் கொடுப்பதற்கு நீங்கள் யார்?' கணவன்-மனைவியானாலும், தனி மனித சுதந்திரம் மதிக்கப்பட வேண்டும். அதீதமான கட்டுப்பாடு, அன்பை வளர்க்காது; உறவைச் சிதைக்கும்.

கணவன்-மனைவி இருவருக்குமிடையில் சிறு பிரச்னை என்றாலும் கூட டைவர்ஸ்தான் தீர்வு என்று சிலர் நினைத்து விடுகிறார்கள். இப்படி டைவர்ஸ் செய்து கொள்கிறவர்கள், கொஞ்ச காலம் காத்திருந்துவிட்டு அடுத்து செய்யும் வேலை, தங்களுக்கு ஏற்ற இன்னொரு வாழ்க்கைத் துணை தேடுவதுதான்!

பிரச்னைகள் தீவிரமடைய அனுமதித்து விட்டால் நாமே தீர்த்துக்கொள்வது சிரமமாகிப் போகும். உணர்ச்சி அறிவை மறைக்கும். நுண்ணுர்வைத் தட்டியெழுப்பி, தெளிவூட்டி உதவுவதற்குத்தான் தகுதியான கவுன்ஸெலர்களை (marriage counsellors) நாட வேண்டும். கௌரவக் குறைவாக எண்ணாமல் இதைச் செய்கிற போது நிச்சயம் நம்பிக்கை பிறக்கும். நம்புவோம்.

*(அழைப்பு நிறைகிறது)*

எழுத்தாக்கம் : **எஸ். சந்திரமௌலி**

**குறிப்பு : இத்தொடரில் இடம்பெற்றுள்ள படங்களுக்கும், மனிதர்களுக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை!**

காதைக் கொடுங்க

# தி.மு.க வேட்பாளர்களுக்கு செக்!

## வருது தேர்தல்!

'சிவகங்கையில் ராதிகா போட்டியிடக் கூடும்' என்று சரத்குமார் உள்ளூர் கட்சிக்காரர்களைக் கலந்து பேசாமல் சொன்னது அந்தத் தொகுதியிலுள்ள சில கட்சிக்காரர்களையும் எரிச்சலடைய வைத்துள்ளதாம். ஏற்கெனவே சிவகங்கை தொகுதியைச் சேர்ந்த கட்சியின் கொள்கைப் பரப்புச் செயலாளர் மருது அழகுராஜ் கட்சியிலிருந்து விலகியபோது, அந்தத் தொகுதியில் பெரும்பாலான கட்சிக்காரர்களும் விலகிவிட்டார்கள். ராதிகா அங்கே போட்டியிட்டால் திருமங்கலத்தைவிட கேவலமாகத் தோற்பார் என்று சொல்கிறார்கள் கட்சிப் பிரமுகர்கள்! பெரிய தலைகள் மோதவிருக்கும் சிவகங்கையில், அ.இ.அ.தி.மு.க.வின் தேர்தல் பொறுப்பு, சமீபத்தில் அம்மாவுடன் இணைந்த ராஜகண்ணப்பனிடம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அவரே கூட வேட்பாளராக இருக்கக் கூடும். எனவே அவர் உள்ளூர் செல்வாக்கு பெற்ற மருது அழகுராஜையும் அம்மாவின் பக்கம் அழைத்துப் போக முயற்சி செய்கிறாராம்.

விஜயகாந்த் தனித்தே களத்தில் நிற்பது குறித்து அவரது மனைவிக்கும் மைத்துனர் சுதிஷுக்கும் ஏக வருத்தமாம். "காங்கிரஸுடன் உடன்பாடு கண்டிருந்தால் தேர்தல் செலவு உட்பட சமாளித்திருக்கலாமே" என்று பொருமிக்கொண்டிருக்கிறார்களாம். "அவர் தனியே நிற்க வேண்டுமென்பது தி.மு.க. விருப்பம். எனவே அந்த அடிப்படையில் ஆதாயம் இல்லாமலா முடிவெடுத்திருப்பார் விஜயகாந்த்?" என்று கேட்கிறார்கள் அ.தி.மு.க. பிரமுகர்கள். "ஜெயிக்க வாய்ப்பில்லாத விஜயகாந்தை ஒதுக்கிவிட்டு தி.மு.க. எதிர்ப்பு வோட்டுகள் மொத்தமாக இரட்டை இலைக்கே விழும்" என்று நம்பிக்கையோடு சொல்கிறார்கள் அவர்கள்!

தேர்தல் களத்தில் பத்திரிகையாளர்களைவிட பிஸியாகக் கருத்துக் கணிப்பில் இறங்குபவர்கள் மத்திய, மாநில உளவுத் துறை போலீஸ்தான். மாநில உளவுத் துறை மார்ச் கடைசி வாரத்தில் எடுத்த கணிப்புப்படி தி.மு.க. அணி ஐம்பது சதவிகித இடங்களைப் பிடிக்கும் வாய்ப்பே



உள்ளதாகத் தெரிய வந்திருக்கிறதாம். இதற்கிடையில் தி.மு.க. வேட்பாளர்கள் கட்சி கொடுக்கும் பணத்தை, தேர்தலின்போது முழுக்கச் செலவழிக்கிறார்களா என்பதைக் கண்காணிக்கவும், அக்கட்சிக்காரர்கள், எதிர்க் கட்சிகளுடன் ஏதாவது 'அட்ஜஸ்ட்' செய்துகொண்டு போகிறார்களா என்பதை மோப்பம் பிடிப்பதற்காகவும் மாநில உளவுத் துறை அதிகாரிகள் தொகுதிகளில் சுற்றிச் சுற்றி வருவார்களாம்.

- ப்ரீதி

## கலக்க வருதுப்பா

# கல்கி

கெட் ரெடி!
கெட் ரெடி!
கெட் ரெடி!

### உங்க மாவட்டத்துல 'சூப்பர்' எதுங்க? 'வேஸ்ட்' எதுங்க?

- நீங்க ஜாலியா ரவுண்டடிக்கிற டூரிஸ்ட் ஸ்பாட் எதுங்கோ?
- பார்த்ததும் பரவசமா கும்பிடு போடற கோயில் எங்கெல்லாம் இருக்குங்க?
- அசத்தலா போட்டுகிட்டு அதிரடி பண்ண சேலை,ஜீன்ஸ் சுத்துவட்டாரத்துல எங்கே பெஸ்ட்டா கிடைக்கும்ங்க?
- உங்க மாவட்டத்தோட தலை போற பிரச்னை எதுங்க? எப்படித் தீர்க்கலாம்ன்னு நினைக்கறீங்க?
- மிஸ்டர் மாவட்டம் யாருங்கண்ணா? என்ன காரணமுங்க?
- கலக்கலா கதை எழுதுவீங்களா? அசத்தலா கவிதை வருமா?
- லொள்ளு பண்ற 'ஜோக்ஸ்' கைவசம் இருக்கா?

-'ஆமா'ன்னா உடனே 'கல்கி'க்குத் தட்டி விடுங்க!




# திருவாரூர், நாகைக்கு வர்றோம்...

# நீங்க ச்சும்மா கோடு போடுங்க...
# நாங்க உடனே ரோடு போடறோம்!

ஆமாம்! உங்கள் மாவட்டத்துக்கு 'கல்கி' குழு, நேரில் வந்து உங்கள் பிரச்னை / யோசனையை ஆராய்ந்து, உங்கள் வாய்ஸுக்கு 'கல்கி' இதழ் மூலம் மைக் கொடுக்கும்?

ஆனா சில கண்டிஷன்ஸ்...

- கீழே உள்ள கூப்பனைக் கத்தரித்து ஒட்டி அனுப்பப்படும் கடிதம், படைப்பு மட்டுமே, பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்படும்...
- ஒரு கடிதத்தில் 5 செய்திகள் / படைப்புகள் மட்டுமே இருக்கலாம்.
- ஒருவரே எத்தனை கடிதம், படைப்புகள் வேண்டுமானாலும் அனுப்பலாம் (தனித்தனி கூப்பனுடன்).
- பிரசுரமாகும் கடிதங்கள், யோசனைகள், படைப்புகளுக்குச் சன்மானங்கள் உண்டு.
- வாசகர்கள் தேர்வு செய்யும் மிகச் சிறந்த கடிதம் அல்லது யோசனை அல்லது படைப்புகளுக்குச் சிறப்புப் பரிசும் உண்டு...
- மாவட்டத்தின்...

பிரச்னைகளுக்கு - ☑ பெட்டிஷன் பாக்ஸ்

ஆன்மிக, வியாபார, சுற்றுலா
தலங்களின் சிறப்புக்கு - ☑ நியூஸ் ஏந்தி பவன்

சிறுகதைகள், கவிதைகளுக்கு - ☑ வேடந்தாங்கல்

நகைச்சுவைக்கு - ☑ ஜோக் ஃபால்ஸ்

என்றவாறு கூப்பனில் ☑ செய்து கவரின் மேல் ஒட்டி, உங்களின் முழு முகவரி, தொலைபேசி தொடர்பு எண் ஆகியவற்றைக் கட்டாயம் எழுதி அனுப்பவும்.

**கடிதங்கள் வந்து சேரவேண்டிய கடைசி தேதி : 18.4.2009**

**கலக்க வருதுப்பா கல்கி**
**திருவாரூர், நாகை மாவட்டம்**

☐ நியூஸ் ஏந்தி பவன் ☐ பெட்டிஷன் பாக்ஸ்
☐ வேடந்தாங்கல் ☐ ஜோக் ஃபால்ஸ்



47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

# தொட்டிலாட்டும் கனவுகள்!

குழந்தை தூங்கிய
தொட்டிலின் கீழே
நானும் தூங்கினேன் -
உதிர்ந்தன குட்டிக் கனவுகள்
என்மீது ஒவ்வொன்றாய்.

ஒரு கனவில் சிங்கம்
என் காலை முத்தமிட்டது -

மற்றொரு கனவில்
கடவுள் என்னை
உப்பு மூட்டை தூக்கினார்!

வேறொரு கனவில்
வீதியெங்கும் நட்சத்திரங்கள்
இறைந்துகிடந்தன!

வானம் இரண்டு
கண்களாய் விரிந்து
குனிந்து என்னை உற்று
நோக்கியது அம்மாவாய் -

ஆடிய தொட்டில்
நிலாவரை சென்றது!

ஒரு மரம் - அதில்
இலைகளுக்குப் பதிலாக
பச்சைக்கிளிகள்!

அம்மாவின் மடியில் காக்கை
சாதம் சாப்பிட்டது!

பொம்மை ஒன்று என்
கையைப் பிடித்து
எங்கோ அழைத்துச் சென்றது!

உடம்பெல்லாம்
சொறிபிடித்த ஒரு
நாய்க்குட்டிக்கு
காலில் சாக்ஸ் மாட்டி
சட்டை போட்டிருந்தது!

குடுகுடுப்பைக்காரன்
தோளில் தொங்கிய
வர்ணப் பையை
வாய் விரித்துக் காட்ட
அதில் என்னைத்
தூக்கிப் போட்டார் அப்பா!

திடுக்கிட்டு விழித்தேன்
பிம்பங்கள் மறைந்து
நிஜமென்னும்
நீள் கயிற்றில் கட்டிய
வெறும் வெள்ளைத் துணியாய்
அசைகிறது தொட்டில்
அழுகிறது குழந்தை!

(வாசம் முடிந்தது)



• அமரர் கல்கி •

# காதல்

### காதல் நோய்!

வேடிக்கை என்னவென்றால், சாம்பமூர்த்தியும் ரங்கநாயகியும் தங்களைக் காதல் நோய் பீடித்திருக்கிறது என்று தெரிந்து கொள்வதற்கு முன்னாலேயே அந்த விஷயத்தை வீட்டிலுள்ள மற்றவர்கள் தெரிந்து கொண்டார்கள். இதிலே ஆச்சர்யமும் இல்லை. ஏனெனில், எப்பேர்ப்பட்ட கெட்டிக்காரர்களானாலும், காதலுக்கு



### திருடர்கள் தேவை

இன்னும் திருடர்களே இல்லாமற் போனால், நமது தீர அலங்காரப் போலீஸாருக்கு வண்டிகளுக்குக் கைகாட்டுவதைத் தவிர வேறு வேலையில்லாமல் போய் விடுமென்பதையும் கவனிக்க வேண்டும். பிறகு யாரைப் பிடித்து அவர்கள் சிறைக்கு அனுப்புவார்கள்? எப்படிப் 'பிரமோஷன்' வாங்குவார்கள்? சிறைக்கூடங்கள் - எவ்வளவோ பணம் செலவழித்துக் கோட்டைகள் மாதிரிக் கட்டியிருக்கும் சிறைக் கூடங்கள் - எல்லாம் காலியாகவல்லவா போய்விடும்? அவற்றை என்ன செய்வது?

- 'சோஷலிஸம் வேண்டாம்' கட்டுரையில்

### கொல்ல அனுமதி!

மகாதேவி சந்திரசேனையைக் கத்தியால் குத்திக் கொல்ல முயற்சிக்கும் காட்சி மிகவும் ஹாஸ்ய ரஸம் பொருந்தியதாயிருக்கிறது... சந்திரசேனை கீழே கிடக்க, மகாதேவி அவள் மீது குனிந்து நின்றுகொண்டு கையிலுள்ள கத்தியைக் காட்டி, "குத்தட்டுமா? குத்தட்டுமா? இங்கே குத்தட்டுமா? அங்கே குத்தட்டுமா?" என்று கேட்பதுபோல் வெகு நேரம் ஆர்ப்பாட்டம் செய்கிறாள். கத்தியைக் கைதவறிப் போட்டிருந்தால் கூட அது சந்திரசேனையைக் கொன்றிருக்கும்.

- 'ஆடல் பாடல்', திரை விமர்சனக் கட்டுரை ஒன்றில்



என்றும்

வசமாகி விட்டால் அவர்கள் முகத்தில் ஒரு மாதிரி அசடு தட்டி விடுகிறது. அவர்கள் ஒருவரையொருவர் பார்க்கும் போது அசடு வழியப் பார்க்கிறார்கள்: அசடு வழியப் பேசுகிறார்கள். அவர்களுடைய நடை, உடை, பாவனை எல்லாமே ஒரு மாதிரி மாறுதல் அடைந்து காணப்படுகிறார்கள். இதையெல்லாம் மறைத்துக் கொள்ளும் சக்தியும் அவர்களுக்கு இருப்பதில்லை.

– 'என் தெய்வம்' சிறுகதையில்

# நோய்!



### உரிமைக் குரல்

பொய் சொல்லுதலும், கண்ணீர் விட்டு அழுதலும் குழந்தை மகாஜனங்களின் ஜீவாதார உரிமைகளென்றும், அந்த உரிமைகளுக்குப் பாதகமான எல்லா முயற்சிகளையும் பலமாக எதிர்க்க வேண்டுமென்றும் இந்த மகாநாடு அபிப்பிராயப்படுகிறது.

– குழந்தைகள் மகாநாடு – தீர்மானம் 2

### முக்தி வேண்டுமா?

"முக்தியளித்திடும் மூலஸ்தானரைக் கண்டு பக்தி செய்த" பின்னர் கொஞ்சம் காற்றும் வெளிச்சமும் வேண்டுமென்று தோன்றுவது இயல்பல்லவா? (அதாவது உடனே முக்தி பெறத் தயாராயிருந்தாலன்றி.)

– 'வாழ்வும் தாழ்வும்' கட்டுரையிலிருந்து





### பூர்வ ஜன்மத் தோற்றம்

மனிதர்கள் பூர்வ ஜன்மத்தில் குரங்குகளாய் இருந்தார்கள் என்று ஒரு கொள்கை உண்டல்லவா? கைதிக் குல்லாவைப் போட்டுப் பார்த்தால் இந்தக் கொள்கை முற்றிலும் உண்மையென்றே தோன்றும். ஏன்? இந்த ஜன்மத்திலேயே பூர்வ ஜென்மத் தோற்றம் எடுத்துக் கொண்டதுபோல் காணப்படும். முக்கியமாக, வெளியிலிருந்து கைதியைப் பார்த்துவிட்டுப் போக வரும் பந்துமித்திரர்களுக்கு இந்தக் கோரக் காட்சி 'கன்றாவி' யாகத்தான் இருக்கும் என்பதில் சந்தேகமில்லை. மனிதனுடைய தோற்றத்தை இவ்வளவு குரூபமாக்கக் கூடிய குல்லாவைக் கண்டுபிடித்தவனுக்கு இதுவரை எவரும் உருவச்சிலை நாட்டாததேன்?

– 'புதிய சிறைவாச ஞாபகங்கள்' கட்டுரையில்

# அன்றும் இன்றும் என்றும்



### வியாதிக்கும் பயம்!

இவ்வளவு அருகில் இத்தகைய அமிர்த தடாகம் ஒன்று இருக்கும்போது, (திருக்கழுக்குன்றம் - சங்கு தீர்த்தம்) சென்னையிலே இவ்வளவு மருந்துக் கடைகள் எப்படிச் செழித்து ஓங்குகின்றன என்றும் ஐயம் தோன்றியது. குளக்கரையை நாங்கள் அடைந்ததும், துணிகளை வரிந்து கட்டிக் கொண்டு ஸ்நானம் செய்வதற்கென்று படிக்கட்டில் இறங்கினோம். ஆனால், பாதிப் படிகள் இறங்கியதும் எங்கள் ஐயம் பறந்தே போய்விட்டது. ஒன்று நிச்சயம். அந்தக் குளத்து நீரில் இறங்கி விட்டால் எப்படிப்பட்ட நோயும் விடைபெற்றுக் கொள்ளும் என்பதில் ஐயமில்லை. அவ்வளவு பயங்கரமான பாசியைக் கண்டு எந்த வியாதி தான் பயப்படாமல் இருக்க முடியும்?

- 'கல் சொன்ன கதை' கட்டுரையில்



### கத்தரிக்கோல்!

இப்போது நல்ல படமாயிருக்கும் இதே 'பக்த குசேலர்' படத்தை, வெகு சுலபத்தில் உயர்தரப் படம் ஆக்கிவிடலாம். ஆறணா செலவில் அப்படிச் செய்யலாம். ஆறணா கொடுத்து ஒரு நல்ல கத்தரிக்கோல் வாங்கிக்கொள்ள வேண்டும்.

- ஆடல் பாடல், விமர்சனக் கட்டுரையிலிருந்து



### சந்தேகம்!

கிருஷ்ணன் புல்லாங்குழல் வாசித்தால் வெகு அபூர்வமாயிருக்கும். நல்ல சங்கீதம் கேட்டுப் பண்பட்ட காதுகளையுடையோரை அவனுடைய வேணுகானம் துரத்தித் துரத்தி அடிக்கும் வல்லமையுடையது. ஆனால், அவனுடைய மாடுகளை அழைப்பதற்கு அந்த அபூர்வ கானமே போதுமாயிருந்தது. [இதை உத்தேசிக்கும்போது தான், பழைய பிருந்தாவனக் கிருஷ்ணனுடைய வேணுகான மகிமையிலும் எனக்குக் கொஞ்சம் சந்தேகம் உண்டாகிறது.]

- 'மயிலைக்காளை' நெடுங்கதையில்

# புடைவை கட்டின தேனீ!

வெ.சீதாராமன்

"கெட்ட கெட்ட கனவா வந்து பயமுறுத்துது டாக்டர்!"

"அதையெல்லாம் பெரிசு படுத்தாதீங்க..."

"அதெப்படி டாக்டர், கரெக்டா பஸ் ஓட்டும் போது தானே அப்படி வருது..."



"உன் பெண்டாட்டி தேனீ மாதிரியா, எப்படி?"

"நிறையத் துட்டு சேர்த்து வைப்பியா, நான் அதை எடுக்கப் போனா 'கொட்டு'வா!"





"தலைவர் தன்னை நடமாடும் கம்ப்யூட்டர்னு சொல்லிக்கறாரே?"

"இருக்கலாம். ஆனா, 'பவர் சப்ளை' அவர் சம்சாரத்துகிட்டேதானே இருக்குது..."



"ஊழல் எங்கே நடந்தாலும் அங்கே நான் வருவேன்னு தலைவர் சொன்னாராம்!"

"தட்டிக் கேக்கவா, பங்கு கேக்கவான்னு சொல்லலையா?"



# ஹால்வுட் ஹாங்கியை

"இறைவனின் படைப்பில் மிகவும் சிக்கலான இயந்திரம் மனித உடல்தான். அதற்குள்ளே ஆவி புகுந்து ஆட்டிவைக்க முடியுமானால், ஒரு சாதாரணமான டீ.வி. பெட்டிக்குள் புகுந்துகொண்டு கபளீகரம் செய்யாதா?" என்று கேட்கிறார் 'யாவரும் நலம்' இயக்குநர் விக்ரம் கிருஷ்ணா. அதற்கு ஏன் டீ.வி.யைத் தேர்ந்தெடுக்க வேண்டும்? அவரே சொல்கிறார்...

"என் குடும்பத்துப் பெண்கள் டீ.வி. முன்னால் உட்கார்ந்து உலகத்தையே மறந்து சீரியல்கள் பார்ப்பதைப் பார்த்து மிரண்டு போயிருக்கிறேன். அதை வைத்து வழக்கமாக இல்லாமல் புதுமையாக ஒரு ஸ்கிரிப்ட் எழுத முடிவு செய்தேன். என்ன புதுமை புகுத்தலாம் என்று மண்டையைப் பிய்த்துக் கொண்டபோது, ஊட்டியில் கழித்த பள்ளி நாட்களும், தாம்பரம் எம்.சி.சி. வளாகத்தில் கழித்த கல்லூரி நாட்களும் நினைவுக்கு வந்தன. அதுவும் பள்ளிக்கூட ஹாஸ்டல் வாழ்க்கையின்போது, மூலையில் தனிமரம் ஒன்றைக் காட்டி, 'இங்கே ஒரு ஆயா தூக்கு போட்டுக் கொண்டு இப்போதும் ஆவியாகத் திரிகிறாளாம். ஹாஸ்டலை ஒட்டிய பாழடைந்த இடத்தில் ஒரு மாணவன் பேய் அடித்து ரத்தம் கக்கிச் செத்துப் போயிருக்கிறான் தெரியுமா?' என்றெல்லாம் சுவாரஸ்யக் கதைகள் நிறைய கேட்டிருக்கிறேன். எனவே, ஆவி கான்செப்டையும், டீ.வி. சீரியல் பார்க்கும் வெறித்தனமான பழக்கத்தையும் சேர்த்து உருவாக்கின கதைதான் 'யாவரும் நலம்' " என்கிறார் 32 வயதான இயக்குநர் விக்ரம் கிருஷ்ணா. இவரது பூர்விகம் கேரளா.

படிப்பை முடித்துவிட்டு பிரபல இயக்குநர் பிரியதர்ஷனிடம் உதவி இயக்குநராக இருந்த இவர் இயக்கிய முதல் படம் தற்கொலை பற்றிய பதினொரு நிமிடக் குறும்படம். தலைப்பு: சைலன்ஸ்.

"ஒரு அறை. ஒரே ஒரு கேரக்டர். அவனது தற்கொலை முயற்சிதான் கதை. ஒரு வசனம் கிடையாது. பின்னணி இசை மற்றும் கேமரா மூலமே கதை சொன்னேன். அந்தப் படத்துக்குத் தேசிய விருது கிடைத்

தது. அடுத்து ராமோஜி ராவுக்காக தெலுங்கில் ஒரு படம் இயக்கினேன். அதன் வெற்றிக்குப் பின் தமிழில் சிம்புவை வைத்து அலை என்ற படத்தை இயக்கினேன். படுதோல்வி அடைந்தது. சினிமா உலகின் நெளிவு சுளிவுகளை எனக்கு அந்தத் தோல்வி புரியவைத்தது.

# கதை!

'யாவரும் நலம்' கதையை மாதவனிடம் சொல்லி ஓ.கே. ஆன சமயத்தில் அம்பானி நிறுவனம் இந்த சப்ஜெக்டை இந்தியிலும் சேர்த்து எடுக்கலாம்; நிச்சயம் வெற்றி பெறும் என்றார்கள். இப்போது இரண்டு படங்களும் ரிலீசாகி, ஹிட் ஆகி விட்டன.

கதையில் விசித்திரம் என்னவென்றால், ஊர் முழுக்க எல்லா டி.வி.க்களிலும் ஒளிபரப்பாவது குஷ்பூ 'யாவரும் நலம்' என்ற பெயரில் நடத்தும் உடல்நல நிகழ்ச்சி. ஆனால் இவர்கள் வீட்டு டி.வி.யில் மட்டும்தான் அதே நேரத்தில் 'யாவரும் நலம்' என்ற சீரியல் வரும். அதில் நடக்கும் சம்பவங்கள் எல்லாம் இவர்களுடைய குடும்பத்திலும் நடக்கும். ஆவி சம்பந்தப்பட்ட படம் என்றாலும், வழக்கமான சினிமா போல, வீணாகப் பார்க்கிறவர்களைப் பயமுறுத்தும் பேய்க் காட்சிகளைக் காட்டக்கூடாது என்பதில் மிகவும் தீர்மானமாக இருந்தேன். பொதுவாக, பேய்ப் படங்கள் என்றால் டிராஜிக் முடிவுதான் இருக்கும். என் படத்தின் கிளைமாக்ஸ் அப்படி இருக்கக்கூடாது என்றும் முடிவு செய்தேன். நகைச்சுவைக்கும் உரிய முக்கியத்துவம் கொடுத்தேன். இந்தப் படத்தில் இந்திய சினிமாவின் மிகச் சிறந்த திறமைசாலிகளுடன் சேர்ந்து பணியாற்றியது எனக்குக் கிடைத்த பெரும்பேறு'' என்று சிலாகிக்கிறார் விக்ரம் கிருஷ்ணா.

''மும்பை, சென்னை ரசிகர்கள் எந்தெந்த இடங்களில் கைதட்டி ரசிக்கிறார்களோ, அதே இடங்களில் பிரிட்டன், தென் ஆப்பிரிக்கா, அமெரிக்கா இங்கெல்லாம் கூட இதே மாதிரியான வரவேற்பு கிடைத்துக் கொண்டிருக்கிறது என்பதைப் பார்க்கிறபோது இந்திய சினிமாவின் வளர்ச்சி பிரமிக்க வைக்கிறது.

இதுவரை நம் ஊர் சினிமாக்காரர்கள் ஹாலிவுட் படங்களைச் சுட்டுக் கொண்டிருந்தார்கள். இப்போது ஒரு ஹாலிவுட் கம்பெனி, இந்தப் படத்தின் கதையை வாங்கியுள்ளது'' என குஷியோடு சொல்கிறார் இப் படத்தின் கதாநாயகன் மாதவன்.

**– எஸ். சந்திரமௌலி**

## இண்டர்வியூ


– விக்ரம் கிருஷ்ணா

நாட்டின் எல்லா மாநிலங்களிலும் வாக்காளர் அடையாள அட்டைகள் வழங்கப்பட்டு, அதன் அடிப்படையில் மக்கள் வாக்களிக்கப் போகிறார்கள் என்று நீங்கள் நினைத்தால் அது தவறு. அஸ்ஸாம், நாகாலாந்து மற்றும் ஜம்மு - காஷ்மீர் ஆகிய மாநிலங்களில் வாக்காளர் அடையாள அட்டை இன்னும் கட்டாயமாக்கப்படவில்லை.

*(அப்பாடா! கள்ள வோட்டு நோ ப்ராப்ளம்!)*

# அக்கம் பக்கம்

அண்மையில் முன்னாள் பிரதமர் தேவகௌடா அரசு விருந்தினர் மாளிகையில் பத்திரிகையாளர்கள் சந்திப்புக்காக பகல் பன்னிரண்டரை மணிக்கே வந்துவிட்டாலும், ஒரு மணி நேரம் சும்மா காத்திருந்துவிட்டு, ஒன்றரை மணிக்கு மேல்தான் பத்திரிகையாளர்களைச் சந்தித்தார். காரணம்: அன்று புதன் கிழமை. பகல் 12 - 1.30 ராகுகாலம். அதுமட்டுமில்லை, அப்பாவைப் போலவே தேவகௌடாவின் மகன் ரேவண்ணாவும் ராகு காலம் பார்ப்பவர்.

*(கடந்த முறை பா.ஜ.க. ஆட்சியைக் கூட ராகுகாலம் பார்த்துத்தான் கவுத்தீங்களா?)*

ஆந்திராவில் சிரஞ்சீவியின் அரசியல் பிரவேசத்தால் யாருக்கு லாபம்? "காங்கிரஸ் எதிர்ப்பு வோட்டுக்களை அவர் பிரிப்பார். எனவே, காங்கிரஸுக்குத்தான் லாபம்" என்று தன்னம்பிக்கையோடு பேசுகிறார் ஆந்திர முதல்வர் ரெட்டிகாரு. அவர் போட்டிருக்கும் கணக்குப்படி 294ல் 234 சட்டசபைத் தொகுதிகளிலும், 42ல் 36 பாராளுமன்றத் தொகுதிகளிலும் காங்கிரஸ் ஜெயிக்குமாம். *(கணக்குதான் பொறுப்பைக் கெடுக்குது அப்பு)*

ஜார்கண்ட் மாநிலத்தில் 14 எம்.பி. சீட். இவற்றில் ஏழு இடங்களில் காங்கிரஸும், ஐந்து இடங்களில் ஜார்கண்ட் முக்தி மோர்ச்சாவும் போட்டி இடுவதாக ஒப்பந்தம். மீதி உள்ள கொதர்மா, ஹசாரிபாக் ஆகிய இரண்டு தொகுதிகளில் பேச்சு வார்த்தையில் ஏற்பட்ட இழுபறி நிலை காரணமாக இரண்டு கட்சிகளுமே வேட்பாளர்களை நிறுத்த முடிவு செய்துள்ளன.



* காங்கிரஸுக்கு லாபமா?

*(குழப்பமே உன் மறுபெயர்தான் கூட்டணியா?)*

நடக்கவிருக்கும் பாராளுமன்றத் தேர்தலில் பெங்களூரின் நான்கு தொகுதிகளுள் ஒன்றில் போட்டியிடவிருக்கும் ஏர் டெக்கான் நிறுவனத் தலைவரான கேப்டன் கோபிநாத், 1994ல்நடந்த கர்நாடகா சட்டசபைத் தேர்தலில், பா.ஜ.க. சார்பில் போட்டியிட்டுத் தோற்றவர் .

*(ஜெயிச்சா, தொகுதி ஜனங்களுக்கு டெல்லிக்கு இலவச ஃப்ளைட் பாஸ் குடுப்பீங்களா?)*

# ரேவண்ணாவின் ராகு காலம்!




தமிழ்நாட்டில் முக்கியக் கட்சிகளின் கையில் டீ.வி. சேனல் இருக்கிறது. ஆனால், பா.ஜ.க.வுக்கு டீ.வி. இல்லாத குறையைப் போக்க சொந்தமாக தாமரை டீ.வி. என்று ஒரு இணைய தளத் தொலைக்காட்சியை ஆரம்பித்துவிட்டது. யார் தெரியுமா இன் - சார்ஜ்? (தராசு) ஷ்யாம்.

*(இந்த 'டீ.வி'க்கு ரிமோட் யார் கையில்?)*

உ.பி.யில் காசிப்பூர் ஜெயிலில் இருக்கும் மாஃபியா தாதாவான முக்தார் அன்சாரிக்கு மக்கள் பிரதிநிதியாக ஆசை வந்துவிட்டது. அவரது ஆசையை நிறைவேற்ற வாரணாசி தொகுதியில் அவரை பி.எஸ்.பி. வேட்பாளராக்கி விட்டார் மாயாவதி. தம் வேட்பு மனுவில் இரண்டு கொலை கேஸ்கள் உட்பட ஒரு டஜன் கேஸ்கள் தம் மேல் இருப்பதாகவும், தமது சொத்தின் மதிப்பு மூணு கோடி என்றும் தெரிவித்திருக்கிறார்.



* சும்மாவிருக்கும் சுகம்!

*(அன்சாரி புண்ணியத்தில் வாரணாசியின் புனிதம் அதிகரித்துவிட்டது!)*

தேசிய ஜனநாயகக் கூட்டணியின் தேர்தல் பிரசாரத் துவக்கப் பேரணி, உ.பி.யில் மதுராவில் நடந்தபோது, 'ஜெயந்த்'தின் அரசியல் அறிமுக நிகழ்ச்சியாகவும் அமைந்தது. ''ஜெயந்த் என்ற பெயருடன் எனக்கு மிகவும் நெருக்கமான சென்டிமென்ட் உண்டு'' என்று பேசினார் அவர். இந்த ஜெயந்த் அத்வானியின் மகன் இல்லை. கூட்டணிக் கட்சியான லோக்தள் தலைவரான அஜித் சிங்கின் மகன்.

*(இது மகன்களின் அரசியல் காலம்!)*

மே.வங்காளத்தில் கம்யூனிஸ்ட் கூட்டணியை வீழ்த்த சபதம் செய்து, காங்கிரஸுடன் கூட்டணி வைத்துக்கொண்டிருக்கிறார் மம்தா பானர்ஜி. ஆனால், பக்கத்து மாநிலமான திரிபுராவில் இரண்டு கட்சிகளுக்கும் கூட்டணி இல்லை!

*(வழக்கமா கம்யூனிஸ்ட்டுங்கதான் காங்கிரஸோட இப்படி கூட்டணி போடுவாங்க!)*

**- பரத் ராம்**

# காற்று வரும் பருவம்!

இருள் விழுந்துவிட்டது! புளியமரத்துக்குள் விழுந்து நிலா வெளிச்சம் சிதறிக் கிடந்தது! கோவிந்து கட்டிலில் கவிழ்ந்து கிடந்தான். வைக்கோல் படப்புக்குப் பின்னாடி பஞ்சு! சிறிது நேரம் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். பசி இல்லாமல், தாகமில்லாமல் இப்படிப் பார்த்துக் கொண்டே இருந்தால் போதும்! புத்தியில் எதுவும் புகுந்துவிடாமல், மனசில் எந்த அசைவுமில்லாமல் அந்த முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாலே போதும்!

இருள் விழுந்த பின்பும். அம்பாரம் போட்ட பின்பும் களத்து வேலைகளுக்குக் குறைவில்லை. ஜனங்கள் தரையைக் கூட்டுவதும், வைக்கோல் பிரிபோடுவதும், முறம் வைத்துப் புடைப்பதுமாக இருந்தனர். புளியமரத்தின் இலையிலும் கிளையிலும் விழுந்து திட்டுத் திட்டாகத்தான் வெளிச்சம் சிதறிக் கிடந்தது. ஆனாலும் அந்த முகம் காண வெளிச்சத்துக்குப் பஞ்சமில்லை.

யாரோ பாடும் ஒரு நாட்டுப் பாடல் இழைந்து கொண்டிருந்தது.

கோவிந்து கண்களை மூடிக் கொண்டான். தனக்காக, தன் தனிமைக்கான குரல் மாதிரியே அது இருந்தது. அதனுடன் ஒரு கோடாங்கி ஒலியும் கூடச் சேர்ந்து கொண்டால் நரம்புகள் வெடித்துச் சிதறிவிடும்.

பஞ்சுவின் முகம்; இருளிலும் அந்த முகம் தகதகவென்று ஜொலிப்புக் காட்டுகிறதே! இருளின் நிறத்துக்கும் அவளின் நிறத்துக்கும் காட்சி கண்ணைக் கட்டிவிடும்.

பஞ்சுவும் அவனையே பார்ப்பது தெரிந்தது. கையில் ஏதோ வைக்கோல் பிரி, திரிந்து கொண்டிருந்தது. 'பஞ்சு பஞ்சு...' அவனின் தாழ்ந்த குரல் தடுமாறிற்று. அந்தக் குரல் அவளை எட்டவில்லை. குரலை அதட்டிக் கூப்பிட வேண்டும் போல் வெறி. எழுந்து படப்புக்குப் பின்னால் நடந்தான். கிழக்குப் பக்கம் ஏழு எட்டு பேர் உட்கார்ந்திருப்பது தெரிந்தது. படப்போரமாக நடுங்கிக் கொண்டு நடந்தான். ஒரு டார்ச் ஒளி மேலும் கீழுமாய் ஆடிற்று. படப்புச் சந்துக்குள் போய் 'பம்மி'க் கொண்டான்.

''ச்சு! என்ன இது?'' அவள் குரல் நடுங்கிற்று.

''நீ இங்க வருவேன்னு நினைக்கலெ பஞ்சு!''

''நீங்க வருவீங்கன்னு தெரியும்.''

நிமிர்ந்து பார்த்தான் அவன்.

''ஏதேதோ சாக்குப் போக்குச் சொல்லி ஆத்தா கூடவே கிளம்பியாச்சு.''

''நான் வருவேன்னு எப்படித் தெரியும்?''

''தெரியும்!''

''எப்படிங்கிறேன்?''

''ஒங்களுக்கு ஒண்ணுமே புரியாது. புரியாத மாதிரிதேன் நடக்குறது...''

''நிஜமா பஞ்சு!''

அவள் முகம் கோணிற்று. கன்னத்துச் சதை கனிவு கொடுத்தது.

''ஊர்லெ என்ன என்னவோ சொல்லுதுக. அதுக சொல்லச் சொல்ல உங்க ஞாபகம் ஜாஸ்தியாகுது. இப்பவெல்லாம்




அடிக்கடி ஞாபகம் தான். ஆயுசு மட்டும் இப்படியே... ஒரு கண்ணுலெயும் விழுந்திடாம இப்படி ஒண்ணும் புரியாம, வேஷம் போட்டுக்கிட்டிருக்கணும்'' சட்டென்று அவள் குரல் அழுகை ஒட்டமாயிற்று. முகம் கோணி கண்ணில் நீராகத் துளிர்த்தது. ''பஞ்சு பஞ்சு'' என்று அவள் தோளைப் பிடித்துக் கொண்டு அடித்தொண்டையில் கத்தினான். யாரும் கேட்காத குரல். ''யாராவது வந்திடுவாங்க'' என்றாள்.

''யாரும் வரமாட்டாங்க.''

''இந்த மாதிரி எத்தனை நாளைக்காம்? எனக்குச் சாகணும் போல வருது. ஆனா நாம நெனைச்சாப்புலெ சாக முடியுமா?''

''எம்பேர்லெ சந்தேகம் வந்துடுச்சு. அதான் அழுகை. இப்படி நீ பேசிக் கேட்டிருப்பனா?''

சட்டென்று அவன் கையைப் பிடித்துக் கொண்டாள்.

''நீங்க எப்படியாவது களத்துக்கு வரணும், வரணும்னு நெனைச்சேன். யார் சொல்லியும் வரலெ. நீங்க வரணும். அப்படின்னு நெனைச்சது.''

''அப்பமன்னா?''

வாயை மூடிக் கொண்டு விசும்பினாள்!

''ஏய்...''

''எனக்குச் சொல்லத் தெரியலெ. ஊா

நாட்டுலெ வெட்டு குத்துனு கெடக்கு. நம்மளக் கண்டா அதுகளுக்கு ஒரே ருசியாப் போகும். எனக்குப் பயமாகவே இருக்கு.''

''என்னை எவனாலெயும் சாகடிக்க முடியாது.''

''ஒங்க மனச சாகடிச்சுட்டா?''

''யாரு?''

''அதுக்கு ஆளா இல்லெ!''

''அத்தனை சிறிசா என் நெஞ்சு?''

சட்டென்று அவன் கையைப் பிடித்து இழுத்து, அணைத்துக் கொண்டாள். 'நான் சாகுற முட்டும் இப்படியே இருந்துட்டாக் கூடப் போதும். எனக்கு வேற ஒண்ணும் வேண்டாம்' என்று அவன் நெஞ்சை இறுக்கிக் கொண்டாள். வாய் எதையோ குழறிக் கொண்டுதான் இருந்தது. அந்த இருட்டும் வெட்ட வெளியும் அவர்களின் தைரியத்தைத் தூண்டிற்று.

''என்னாலெ உங்களுக்குக் கஷ்டம்.''

''எனக்கு என்ன கஷ்டம்?''

''நான்தானே ஒங்களைப் பாழ் பண்ணினது!''

கோவிந்து அவளைப் புரியாமல் பார்த்தான்.

''நான் இருக்குறமுட்டும் உங்களுக்குக் கஷ்டம்தான்.''

''இஷ்டப்பட்டுத்தானே நடக்குது.''

''வெடிப்பா இருக்கவா முடியுது?''

பளபளவென்று விடியவுமே தாம்பு ஓட்டி, சூடடிக்கத் தொடங்கி விட்டார்கள். ஐயாவும் வந்துவிட்டார். பதினொரு மணிக்கெல்லாம் சூட்டடி முடிந்துவிட்டது. எல்லாம் கூட்டிக் குவித்தார்கள். வைக்கோலைக் களத்து மேட்டுக்குக் கீழே குமரப்பன் தோட்டத்துத் தெருவில் உலரப் போட்டார்கள். அந்தப் பகுதியே ஒரே வைக்கோலாகத்தான் கிடந்தது! செட்டியாரின் வயல் அறுப்பு இன்றுதான் தொடங்கியது. அவருக்கும் பக்கத்தில்தான் களம். களத்தைச் சுத்தம் பண்ணும் வேலை தொடங்கிவிட்டது. மம்பட்டியான் அந்த வேலையில் இறங்கினார்.

''சேவாலு எங்க போனான்?''

''வூட்டுக்குப் போயிட்டு வர்றேனுச்சு.''

''இன்னும் காணலெ.''

''வண்டி கொண்டாரச் சொல்லணுமா?''

''இன்னைக்கே கொண்டு போயிடவா?''

''அதான் ஆச்சே. தூத்தியாச்சுனா மூட்ட போடச் சொல்லணும். வீணா களத்துக்குக் காவலா?''

''அதுவும் நல்லதுதேன்'' என்றான்



## அணுகுண்டை மிஞ்சும் ஆயுதம்

முதல் அணு குண்டைத் தயாரித்த டாக்டர் ராபர்ட் ஓமன் ஹீமத்திடம், 'நீங்கள் இவ்வளவு பயங்கரமான ஆயுதத்தைக் கண்டுபிடிக்கிறீர்களே! இதை எதிர்த்து நிற்கக்கூடிய பாதுகாப்பான ஆயுதம் ஏதாவது இருக்கிறதா?' என்று கேட்டதற்கு,

'ஓ இருக்கிறதே!' என்றார்.

என்ன அது என்றதற்கு சிரித்துக் கொண்டே, **'சமாதானம் தான்'** என்றார் ஓமன் ஹீமர்.

**- தேனி முருகேசன்**

அம்மா.

கோவிந்துக்கு மனம் விழுந்துவிட்டது. இன்னும் ஒரு நாள் களத்தில் இருந்தால் நன்றாக இருக்கும் போலப் பட்டது. ''காயவும் நாளைக்குக் கூட அட்டிகை போடலாம்யா.''

''எதுக்குப்பா... மழை தண்ணி காலத்துலெ?''

''சரி. வண்டி கொண்டாரச் சொல் லவா?''

''இதுக்காகப் போகணுமே!''

''இதோ, போணதும் வர்றேன்.''

''செட்டியார் வண்டியைக் கூடக் கேக்கலாம்.''

''ம்.''

தூற்றி முடித்துவிட்டார்கள். நீண்ட பாள மாகக் கிடக்கும் நெல்லை அம்பாரமாகக் குவித்தார்கள். தூசி பொட்டு இல்லாமல் சுத்தம் செய்தார்கள். சாக்கை இரண்டாக மடித்து விசிறினார்கள். விசிற விசிற துரும் பெல்லாம் சிதறி ஓடிற்று! நெல் அளப் பதற்கு மண்டையன்தான். அவனுக்குத் தான் கை சுத்தம்.

மண்டையன் வானம் பார்த்துக் கை குவித்தான். முதலில் குலதெய்வத்துக்கு நெல் அளந்தான். முதலில் சிறிது நெல்லை அள்ளிச் சாக்கில் போட்டார். 'பதி' என்று மரக்காலை அம்பாரத்தில் குத்தினார். 'லாபம்' என்று முதல் மரக்கால் நெல் சாக்குக்குள் விழுந்திற்று. அடுத்து இரண்டு மூன்று என்று ஆறு மரக்கால். கோவிந்துதான் அதற்குச் சாக்குப் பிடித் தான். முதலில் ஒரு கைப்பிடி அதைக் கட்டி ஒரு ஓரத்தில் வைத்தான்.

''கொத்துக்காரர் வரலாம்.''

''ஏய் மண்ட என்ன மொறை தெரியாம போச்சா? கோயில் பூசாரியை மறந் துட்டியா!''

''சரி வாங்க.''

பூசாரிக்கு ஒரு மரக்கால் அளந்து போட்டார்.

''காணாது. கோயிலுக்குக் கொஞ்சம் உண்டனா அளந்து போடலாம்.''

மண்டையன் ஐயா முகத்தைப் பார்த் தான்.

''சரி, இன்னும் ரெண்டு

## வெளியூர் போன காக்கைகள்

தெனாலிராமனின் அறிவாற்றலைச் சோதிக்க விரும்பிய அரசர் அவனிடம், ''தெனாலிராமா! இந்த ஊரில் எத்தனை காக்கைகள் உள்ளன?'' என்று கேட்டார்.

''4444 காக்கைகள்'' என்று பதில் சொன்னான் தெனாலிராமன்.

''4444க்கு மேல் இருந்தால்?'' என்றார் மன்னர்.

''வெளியூர் காக்கைகள் இவ்வூருக்கு வந்திருக்கும்'' என்று கூறினான் தெனாலிராமன்.

''4444க்குக் குறைந்தால்?'' - இது மன்னர்.

''இவ்வூர் காக்கைகள் வெளியூர் சென்றிருக்கும்'' என்றார் தெனாலிராமன். இதைக் கேட்டு மகிழ்ந்த அரசர் அவனுக்கு வெகுமதிகள் பல தந்து மகிழ்வித்தார்.

- பாலு, சென்னை



# மண்டையன் வானம் பார்த்துக் கை குவித்தான், முதலில் குலதெய்வத்துக்கு நெல் அளந்தான்



மரக்கா போடு.''

''கொத்துக்காரர் வாங்க.''

''நல்லா அளக்கணும்.''

''எனக்குச் சொல்ல வேண்டாம். நம்ம அளவு சுத்தமா இருக்கும். வீட்டு மரக்காதேன்.''

''சரி போடு...''

மண்டையன் அளந்தார். ஒவ்வொருவராக அளந்து முடிந்தது.

தையல் போட்டு மூட்டைகளை எண்ணி வண்டியில் ஏற்றினார்கள். வண்டியில் ஏற்றுவதற்கு முன்னமே அம்மா வீட்டுக்குக் கிளம்பிவிட்டது. வீட்டைத் திறந்து வைக்க வேண்டும். ஐயா கோவிந்துவையும் முன்னாடியே போகச் சொன்னார். கோவிந்து நகரவில்லை. இங்குமங்குமாய் அலைந்து கொண்டிருந்தான். வண்டிப் பாரம் தயாராகிவிட்டது. மம்பட்டியான்தான் வண்டி ஓட்டினார். கோவிந்துக்கும் ஒரு மாதிரி இருந்தது. வண்டிக்குப் பின்னாடியே அவன்தான் சென்றான். ஆனால், ஒரு வார்த்தை பேசவில்லை. மாட்டைப் பத்துவதிலும் வண்டியைத் திருப்புவதிலும் மேக்காலிலும் இடக்காளையிலும்தான் அவர் கவனம். முதல் நடை முடிந்து இரண்டாவது நடையும் வண்டி வந்தது.

இரண்டாவது நடையில் அப்பா, ஜெயபால் எல்லாம் வண்டிக்குப் பின்னாடி நடந்து வந்தனர். மூட்டையை இறக்கி அடுக்க இரண்டு மூன்று ஆட்கள் வந்திருந்தனர். எல்லாம் முடித்ததும் மம்பட்டியானிடம் அப்பா காசு கொடுத்தார். அவர் முகம் பிரகாசமாயிற்று! அவர் கோவிந்து வீட்டுக்கு வேலையாள் அல்ல; செட்டியார் சொல்லிட்டாரே என்பதற்காகத்தான் வந்திருப்பார். நெல்லறுத்து வீட்டுக்கு வந்ததும் அம்மா வீட்டில் காமாட்சி விளக்கை ஏற்றி வைத்தாள். குறையாகக் கட்டப்பட்ட நெல் சாக்கைப் பிரித்து ஒரு படி நெல்லை அளந்து எடுத்தார்.

''கோவிந்து இதைக் கடையிலெ கொடுத்துட்டு உப்பு மஞ்சள் வாங்கிட்டு வா... மரக்காலை எடுத்திட்டுப் போ.''

கோவிந்து மரக்காலை எடுத்திட்டுக் கடைக்குப் போனான். நெல்லைக் கடையில் போட்டுவிட்டு, அதற்கு மரக்கால் நிறைய உப்பு வாங்கினான். ஒரு கொத்து மஞ்சள் கிழங்கு. அதைத் தூக்கிக் கொண்டு வீட்டுக்கு வந்தான். அம்மா அதைச் சாமி படத்துக்குக் கீழே வைக்கச் சொன்னது. வைத்தான். வீடு முழுக்க நெல்லாகச் சிதறிக் கிடந்தது.

''ஐயா!''

வாசலில் குரல் கேட்டது.

''யாரது?''

''சின்னய்யா இருக்காரா?''

''கோவிந்தா?''

''சேவாலு ஐயா...''

ஜெயபால் வாசலுக்கு ஓடினான்!

(காற்று வீசும்)



# மீனிங் ஃபுல் சினிமா - "ஃபிராக்"

தம்முடைய முதல் படத்திலேயே முத்திரையை ஆழமாகப் பதித்து மீனிங்ஃபுல் சினிமா இயக்குநர் வரிசையில் சேர்ந்துவிட்டார் 'அழகி' நந்திதா தாஸ்! முதலில் வெளிநாட்டுத் திரையரங்குகளில் திரையிடப்பட்டு ஏகப்பட்ட விருதுகளை அள்ளிக் குவித்திருக்கிறது 'ஃபிராக்'.

2002ல் நடந்த குஜராத் கோத்ரா கலவரத்தை மையமாகக் கொண்டு பின்னப்பட்ட கதை. நஸ்ருதீன் ஷா, தீப்தி நவல், பரேஷ்ராவல் போன்ற மிகச் சிறந்த நடிகர்களைத் தேர்வு செய்து, அவர்களை நடிக்க விடாமல் அந்தப் பாத்திரமாகவே செயல்பட வைத்ததில் நந்திதா தாஸின் புத்திசாலித்தனம் பளிச்சிடுகிறது.

ஃபிராக் என்றால் தேடல், பிரிவு என்று பொருளாம். குஜராத் கலவரம் நடந்து முடிந்து ஒரு மாதம் ஆன பின்பு எப்பேர்ப்பட்ட பாதிப்பை ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் ஏற்படுத்துகிறது என்பதை ஆழமாக, ஒவ்வொரு ஃப்ரேமிலும் செதுக்கியிருக்கிறார் நந்திதா தாஸ். முதல் ஸீனிலேயே ஏகப்பட்ட சவங்களை ஒன்றாகக் குழியில் புதைப்பதிலிருந்தே படம் எவ்வளவு சீரியஸ் என்பது புரிகிறது.

கலவரம் நடந்து முடிந்த பின்பும் அது விட்டுச் சென்ற தழும்புகள் என்றென்றும் இருக்கும் என்பதே ஃபிராக்கின் கதை!

இசைக் கலைஞராக வரும் நஸ்ருதீன் ஷா, என்றேனும் இந்து-முஸ்லீம் மதக் கலவரம் முடிந்து போகும் என நம்பிக்கையுடன் இருக்கும் இஸ்லாமியர். இந்து-முஸ்லீம் தம்பதிகளான சமீர்-அனு ஜோடி (சஞ்சய்சூரி - டிஸ்கோ சோப்ரா)யின் தவிப்பு, தான் இஸ்லாம் மதத்தைச் சேர்ந்தவன் என்பதால் என்ன ஆகுமோ, தில்லிக்குப் போய்விடலாமா என பீதியில் இருக்கும் கணவன். மதவெறி கொண்ட கணவனின் ஏச்சுப் பேச்சுக்களைத் தாங்கும் தீப்தி நவல், கலவரத்தன்று ஒரு முகமதியப் பெண்ணை ஆபத்திலிருந்து காப்பாற்றத் தவறிவிட்டோமே என்று குற்ற உணர்ச்சியுடன் நாட்களைக் கடத்துவது, தந்தையைத் தேடி அலையும் சிறுவன் மோஹ்சின், இனி தன் அப்புவைப் பார்க்கவே மாட்டோம் எனத் தெரியாமலேயே தேடும் பரிதாபம்... இந்த ஐந்து காரெக்டர்களுடன் நகரும் கதை. ஒருவருக்கொருவர் ஏதோ ஒருவகையில் சம்பந்தப்பட்டிருப்பது திரைக்கதையின் பலம்!

காமிராமேன் ரவி. கே.சந்திரன்! பாதிக்கு மேல் கதையை இவர் காமிரா சொல்லி விடுகிறது. "ஆடியன்ஸ் ரெஸ்பான்ஸ் பார்த்து நெகிழ்ந்து போய் விட்டேன். மனித உணர்வுகள் எங்கும் ஒரே மாதிரி தான். கலவரத்தை நான் திரையில் காண்பிக்கவில்லை. கலவரத்துக்குப் பிறகு நடக்கும் சம்பவங்கள், ஆறாத தழும்புகள், ரணங்கள் - இவற்றைத்தான் சொல்லியிருக்கிறேன்..." என்கிறார் நந்திதா தாஸ்.

**- லதா சேகர்**

அடுத்து வரும் இரு திருநாமங்கள்: **க்ரீம்காரி, கேவலா** - இவை இரண்டுமே மந்த்ர பூர்வமான நாமங்கள். க்ரீம் மந்திரத்தைத் தனது இருப்பிடமாகக் கொண்டவள் அம்பிகை.

**கேவலா** - கேவல ஞானம் என்று சொல்வதுண்டு. ஞானத்திலேயே ரொம்ப உயர்ந்த ஞானத்தைத்தான் கேவல ஞானம் என்று சொல்வது! கேவலம் என்பது இரண்டு நேர் எதிரான நிலைகளையும் குறிக்கும். ரொம்ப அல்பமான விஷயத்துக்கும் கேவலம் என்று பெயர். மிக உயர்ந்த விஷயத்துக்கும் கேவலம் என்று பெயர். இங்கே, மிக உயர்ந்த ஞானமாகிற பரமானந்த ஞானத்தின் ஸ்வரூபமாக அம்பிகை இருக்கிறாள் என்று பொருள்.

# ஆன்ம அனுபவம் அருள்பவள்!

### அகத்திருள் அகலும்!

**குஹ்யா** - மறுபடியும் குஹ்யம் வருகிறது; **குஹ ஜன்ம பூ** என்ற திருநாமத்தில் வந்தது போல. குகைக் குள்ளே இருக்கக்கூடியவள் குஹ்யா - நமது மனமாகிய குகை. அபிராமி பட்டர் பாடுகிறபோது, "அந்தரி! அந்தரி!" என்று அழைப்பார் அபிராமி அம்மையை.

***சுந்தரி சிந்தூர*** வர்ணத்தினாள்/அந்தரி என்பார்! அந்தரி என்றால் துர்கா தேவி என்று ஓர் அர்த்தம் உண்டு. அந்தத்துக் குள்ளே இருக்கக்கூடியவள் என்றும் ஓர் அர்த்தம் உண்டு.

***அந்தஸ் திமிர மிஹிர த்வீப நகரி***

என்றாரே ஆசார்யர் ஆதிசங்கரர்! நம் உள்ளுக்குள்ளே இருக்கும் இருட்டுக்கு, சூரியனாக இருக்கக்கூடியவள்தான் அந்தரி. அதற்கு நேரடியான சம்ஸ்கிருத பதம்தான் குஹ்யா.

குஹ்யா என்கிற திருநாமத்துக்கு இன்னொரு அர்த்தமும் உண்டு. தகராகாச ரூபிணியாக அம்பாள் இருக்கிறாள் என்பதைப் பார்த்தபோது நாம் இதைச் சிந்தித்தோம்.

அம்பாள் என்ன பண்ணுகிறாள், நம் மன குகை இருக்கிறதே, ஹ்ருதயத்தில் இருக்கக்கூடிய குகை, அதிலே இருக்கக் கூடிய தகராகாசம் என்பது சின்ன ஆகாசம்; அல்பமானது. மேலேயோ, பரம் பொருளாக இருக்கக்கூடிய தகராகாசம்.

ஏன் அதற்கு அப்படிப் பெயர் வைத்தார்கள் பெரியவர்கள்? அது பெரிய, பரபிரம்ம ஆகாசம் என்பதால். ஆனால், அதன் சின்ன பிரதிநிதித்வம் ஜீவன். இந்த ஜீவனை, அங்கே இருக்கக்கூடிய பரமாத்மாவோடு சேர்த்து வைக்கக்கூடியவளுக்கு குஹ்யா என்று பெயர்.

### குரு ஸ்வரூபிணி!

பரமாத்மாவுடன் ஜீவாத்மாவை இணைப்பவளாக இருப்பதால்தான் அம்பாளுக்கு குரு ரூபிணி என்றும் பெயர் இருக்கிறது. குரு என்ன பண்ணுகிறார்?

பக்தனைக் கொண்டு போய் பகவானிடத்தில் விட்டு விடுகிறார்; அவ்வளவுதான்! அம்பாளும் அதையே செய்வதனால் அவளுக்கு குரு ஸ்வரூபிணி என்கிற ஸ்தானமும் அதைக் குறிக்கும் நாமமும் உண்டு. **குஹ்யா** என்பது அப்படிப்பட்ட ஒரு திருநாமம்.

ஜீவாத்மாவைப் பரமாத்மாவுடன் சேர்த்து வைக்கும் இதே பணியைத்தான் முருகப் பெருமானும் செய்கிறார். அதனால்தான், ஞானபண்டிதரான அவருக்கு குரு குஹன் என்றும் பெயர். அந்தப் பெயரைத் தான் எடுத்து வந்தார் மிகப் பெரிய அம்பாள் உபாஸகரான முத்துஸ்வாமி தீக்ஷிதர். தமது கீர்த்தனைகளில் 'குரு குஹ' என்று தம் முத்திரையை வைத்தார்.

அம்பாளை குஹ்யாவாக நன்கு உணர்ந்தவர் முத்துஸ்வாமி தீக்ஷிதர். **அவளுடைய** வெளிப்பாடாக இருக்கக்கூடிய ஞான பண்டிதன் மீதுதான் தீக்ஷிதர் திருத்தணிக்குப் போகிறபோது, முதன்முதலில் பாடுகிறார். *'ஸ்ரீ நாதாதி குருகுஹோ ஜயதி ஜயதி'* என்ற கீர்த்தனை. இங்கே அவர் பயன்படுத்தும் 'குரு குஹோ' பதத்துக்கு, முருகப் பெருமான் என்பது மட்டுமே அர்த்தம் இல்லை. அம்பாள் உபாஸகரான தீக்ஷிதருக்குத் தெரியும், அந்த ஸ்ரீ மாதாவே குருமூர்த்தியாக, குஹ்யாவாக இருக்கக்கூடியவள் என்பது.

## கைவல்யம்

**கைவல்யபததாயினி** என்பது அடுத்து நாம் அனுபவிக்கும் திருநாமம். கைவல்ய பதத்தைத் தரக்கூடியவள் அம்பிகை.

கைவல்யம் என்றால் என்ன? எது?

பொதுவாக, நற்கதி அடைவது குறித்து நான்கு நிலைகளைக் குறிப்பிடுவார்கள் - ஒவ்வொரு சம்பிரதாயத்திலும் கொஞ்சம் மாறுபடும் இந்த நான்கும்:

சாலோக்யம்
சாமீப்யம்
சாரூப்யம்
சாயுஜ்யம்



- சாக்தம், சைவம், வைணவம் என்று எல்லாவற்றிலும் இவை உண்டு. ஆனால் கொஞ்சம் கொஞ்சம், இலேசாக இவற்றின் பொருள் மாறுபடும். பொதுவாக இவற்றுக்கு என்ன அர்த்தம்?

## நான்கு நிலைகள்

பக்தர்கள், அம்பாளையே நினைத்து நினைத்து பலவிதமான சடங்குகள் சம்பிரதாயங்கள் மூலமாக அவளை வணங்கக் கூடியவர்கள் - இவர்கள் எங்கே போகிறார்கள் என்றால், அம்பாளுடைய உலகத்துக் குப் பக்கத்தில் போய்விடுகிறார்கள். இது

தான் சாலோக்யம். எப்போதுமே அம்பாளை நினைத்து பூஜிப்பவர்கள் சில சமயம் சொல்வதை நாம் கேட்டிருக்கிறோம் - ''அம்பாள் பக்கத்திலேயே நான் இருக்கிறேன்'' என்பார்கள். நாம் எந்த தெய்வத் திருமேனியைப் பூஜிக்கிறோமோ, அதற்குப் பக்கத்தில் போய்விடுகிறோம் என்பது இதன் அர்த்தம்.

அடுத்தது சாரூப்யம். ரூபம் - தோற்றம் - கிட்டத்தட்ட ஒரே மாதிரி வந்துவிடும். அம்பாள் வேறு நாம் வேறு என்று தெரிந்திருக்கிறது. ஆனால், அந்த அம்பாள் ஸ்வரூபத்தை நெஞ்சில் ஒருவர் வைத்து, வைத்து, வைத்து வழிபடும்போது, ''அவர் முகத்தில் என்ன தேஜஸ்! அம்பாள் உபாஸகர் அல்லவா!'' என்று சொல்கிறோம் அல்லவா? வழிபடும் மூர்த்தியின் ரூபம், வழிபடுபவருக்கு வந்து சேர்கிற இந்த நிலையைத்தான் சாரூப்யம் என்று சொல்வது.

அடுத்தது சாமீப்யம் - பக்கத்தில் போவது; இன்னும் பக்கத்தில் நெருங்கிப் போவது. எப்படி என்றால், அவரவர் இருக்கக்கூடிய ஆசிரம தர்மங்களில், அது கிருஹஸ்தாசிரமமாக இருந்தாலும் சரி வானப்பிரஸ்தாசிரமமாக இருந்தாலும் சரி, அவரவர் இடத்தில் இருந்துகொண்டு, அவரவர் தர்மத்தைக் கடைப்பிடித்து, அவரவர் உபாஸனைகளை அவரவர் வசதிப்படி செய்கிறார்களே, அப்படிச் செய்யும்போது அவர்கள் அம்பாளுக்குப் பக்கத்தில் போகிறார்கள் - இது சாமீப்யம்.

அடுத்தது சாயுஜ்யம். முன்னால் பார்த்தோமே, அம்பாள் வேறு, தான் வேறு என்று கருதுகிற ஒரு நிலை, அவ்வாறு இந்த ஜீவன் வேறு, அம்பாள் வேறு என்று நினைக்கின்ற நிலைமை இல்லாமல், அந்த அம்பாளின் ஸ்வரூபத்தை, அப்படியே தனக்குள்ளே, சமயாசார ரீதியில் பார்க்கிறபோது, இரண்டும் ஒன்றுதான் என்று வழிபடக்கூடிய ஸ்ரீவித்யா உபாஸகர்கள் இருக்கிறார்களே, அவர்கள் அம்பாளாகவே இருக்கக்கூடிய சாயுஜ்ய நிலையை அடைகிறார்கள்.

**நான்கையும் தாண்டி...**

இந்த நான்குக்கும் ஸ்தானம் என்று பெயர். இந்த நான்கிலுமே, ஏதோவொரு இடத்தில், ஜீவனானது, 'நான் வேறு, பரமாத்மா வேறு' என்று நினைக்கக்கூடிய சிறு வித்தியாசம் இருக்கும். ஆனால், ஆன்ம அனுபவம், அனுபூதி என்று சொல்கிறோமே, அது இதைவிட ஒரு படி மேலே போய், முழுக்க முழுக்க முழுக்க பரமாத்மாவைத் தன்னுடைய ஆத்மாவுக்குள்ளேயே ஒரு சாதகன் அனுபவிக்கக்கூடிய நிலை. இந்த நிலையைத்தான் அருணகிரிநாதர் கந்தர் அனுபூதியில் விவரிக்கிறார்; முருகப் பெருமானை அனுபூதியாக அனுபவிக்கிறார். மஹாகவி பாரதியார், அம்பாளை அனுபூதியாக அனுபவிக்கிறார்.

அப்படியே அந்த ஆன்ம அனுபவத்தில், பரமாத்மாவை தன் ஆன்மாவுக்குள்ளே அனுபவிக்கக்கூடிய தன்மை இருக்கிறதே, அதற்குத்தான் கைவல்யம் என்று பெயர்.

அம்பாள் சாலோக்ய, சாரூப்ய, சாமீப்ய, சாயுஜ்யங்களையும் கொடுத்து, கைவல்யத்தையும் கொடுக்கிறாள்.

கைவல்யத்தையே தந்துவிடுகிறாள் என்றால், மற்ற நான்கையும் தர மாட்டாளா என்ன! விருந்தில் பாயஸம் பரிமாறியாயிற்று என்றால் மற்றவை எல்லாமே கிட்டும் என்றுதானே அர்த்தம்!

*[ஸ்ரீ லலிதா மூன்றாம் பாகம் நிறைந்தது. அடுத்த பாகம் சிறு இடைவெளிக்குப் பிறகு இடம்பெறும்.]*

**ஸ்ரீ லலிதா தொடரில் இடம்பெறும் ஸ்ரீ லலிதா சஹஸ்ரநாம விளக்கங்கள், சென்னை, ஆழ்வார்ப்பேட்டை, ஆஸ்திக சமாஜம் அமைப்புக்காக, வீனஸ் காலனி அரங்கில், டாக்டர் சுதா சேஷய்யன் ஆற்றிய பிரவசனங்களின் தொகுப்பு.**

**தமிழக அரசியலில் தனிமைப்படுத்தப்பட்டிருக்கும் பா.ஜ.க., உதிரிக் கட்சிகளுடன் கூட்டணி அமைக்கும் கட்டாயத்துக்குத் தள்ளப்பட்டுள்ளது. இந்நிலையில், மாநிலத் தலைவர் இல.கணேசனுடன் ஒரு சந்திப்பு...**

**கலகலத்துப் போய்விட்டது ஏன்?**

''கடந்த முறை சந்திரபாபு நாயுடு, ஜெயலலிதா இருவரும் கூட்டணியில் இருந்தும்கூட எங்களுக்கு ஒரு இடமும் கிடைக்கவில்லை. பிஜு ஜனதா தளம் போனதில் எங்களுக்கு மகிழ்ச்சியே! கடந்த ஐந்து ஆண்டுகளில் தமிழ்நாட்டில் பா.ஜ.க. வளர்ச்சி அடைந்திருக்கிறது. ஒவ்வொரு மாதமும் ஏதாவது ஒரு மக்கள் பிரச்னையை முன்வைத்து தொடர்ந்து போராட்டங்கள், ஆர்ப்பாட்டங்கள், சாலை மறியல்கள் நடத்தி இருக்கிறோம்; சில விஷயங்களில் நாங்கள் வெற்றி பெற்றிருக்கிறோம். அத்வானி பிரதமர் ஆவார் என்ற நம்பிக்கை நாடெங்கும் உள்ள மக்கள் மத்தியில் ஓங்கி உள்ளது.''



**எப்படி?**

''சில ஊடகங்கள் திட்டமிட்டு, பா.ஜ.க.வால் ஆட்சிக்கு வர முடியாது என்று எழுதுகின்றன. ஆனாலும், நாட்டின் பிரதானமான மாகாணங்களில் பா.ஜ.க. ஆட்சிதான் நடக்கிறது. சிறு மாநிலங்கள்தான் காங்கிரஸ் கையில் உள்ளன. பீகார் போன்ற பெரிய மாகாணங்களில் கூட லாலு பிரசாத், மூன்றே மூன்று தொகுதிகளைக் கொடுத்து, 'உங்கள் செல்வாக்குக்கு இதுவே அதிகம்' என்று சொல்லும் நிலையில்தான் இன்று காங்கிரஸ் கட்சி இருக்கிறது. உ.பி.யில் முலாயம் சிங் ஆறு ஸீட் அளித்து காங்கிரஸை அவமானப் படுத்துகிறார். ஆக, காங்கிரஸ் என்பது தேய்ந்து கொண்டிருக்கும் ஒரு கட்சி. பா.ஜ.க. வளர்ந்துகொண்டிருக்கும் கட்சி.''

**வருண் காந்தி - சறுக்கல்தானே?**

''யார் யார் தேர்தலில் நிற்கக்கூடாது என்று சட்டம் தெளிவாகக் கூறுகிறது. வருண் காந்தியின் பேச்சு குறித்து வழக்குப் பதிவு செய்து விசாரணை நடக்கிறது. சட்டம் தன் கடமையைச் செய்யட்டும். தேர்தல் கமிஷன் அவரை வேட்பாளராக நிறுத்த வேண்டாம் என்று ஏன் சொல்ல வேண்டும்?

ராகுல் காந்தி இந்தியா முழுக்கப் பயணம் செய்கிறார்; குடிசைகளில் தங்குகிறார். ஆனால் அவருக்குக் கிடைக்காத பாப்புலாரிட்டி, ஊடகங்கள் காரணமாக வருண் காந்திக்கு ஒரே நாளில் கிடைத்துவிட்டது.''

**நெகடிவ் பப்ளிசிடி தானே?**

''இல்லை; இந்திய மக்களின் நிஜமான நாடித் துடிப்பு உங்களுக்குப் புரியவில்லை. 'இந்து சமுதாயம் இளிச்சவாய் சமுதாயமில்லை; அப்படித் தவறாக நினைத்து நீ அவர்களை வெட்ட வந்தால், அந்தக் 'கை'யை நான் வெட்டுவேன்' என்கிறார். அதை எப்படி தவறு என்று சொல்ல முடியும்? நேரு குடும்பத்தைச் சேர்ந்த ராகுலுக்குப் போட்டியாக வருண்



காந்தி வருவதை சகித்துக்கொள்ளாத காங்கிரஸ், அரசியலையும், தேர்தல் கமிஷனையும் தவறாகப் பயன்படுத்தி, பதினைந்து ஆண்டுகளுக்கு மேலாக பா.ஜ.க.வில் இருக்கும் வருணை முடக்கப் பார்க்கிறார்கள்.''

**குஜராத் (கோத்ராவுக்குப் பின்) வழக்கில், மதவெறி என்பது பயங்கரவாதத்தைக் காட்டிலும் கொடூரம் என உச்சநீதி மன்றம் தீர்ப்பு கூறியுள்ளது. அமைச்சர் மாயாபென் கொட்னானி 'சரண்டர்' ஆகியுள்ளார். இவை பா.ஜ.க.வுக்கு அடிதானே?**



# ''ஹிந்துக்கள் இளிச்சவாயர்கள் அல்ல!''

## –இல.கணேசன் பேட்டி

''குஜராத்தில் நிஜமாக என்ன நடந்தது என்பது குஜராத் மக்களுக்குத் தெரியும்.''

**ஆறே மாதங்களில் இலங்கைப் பிரச்னையைத் தீர்ப்பதாக வாக்குறுதி எப்படித் தருகிறீர்கள்?**

''வாஜ்பாய் பிரதமராக இருந்தபோது, தமிழர்கள் மீது இதுபோன்ற தாக்குதல்கள் இல்லை; ராமேஸ்வரம் மீனவர்கள் மீது இலங்கை கடற்படை ஒரே ஒரு முறைதான் துப்பாக்கிச் சூடு நடத்தியது; இந்தியா அதைக் கண்டித்தபோது, இலங்கை வருத்தம் தெரிவித்தது. நெடுமாறன், சிவாஜிலிங்கம் என்ற இலங்கை எம்.பி. போன்றவர்கள் சொன்னது இது. காங்கிரஸ் ஆட்சிக்கு வந்ததும் தமிழர்கள் மீதும், இந்திய மீனவர்கள் மீதும் தாக்குதல் அதிகரிக்க என்ன காரணம்? இந்தியா உலகில் எந்த நாட்டுக்கும் சளைத்த நாடு இல்லை என்று போக்ரான் மூலமும், கார்கில் மூலமும் நிரூபித்துக் காட்டினோம்; ஆனால் இப்போதுள்ள பிரதமர் பலவீனமான ஒரு பிரதமர். அதனால் சின்னஞ்சிறு அண்டை நாடு கூட இந்தியாவை மதிப்பதில்லை. எங்கள் அணுகுமுறை ராணுவத் தீர்வு அல்ல; ராஜ்ஜிய உறவுகள் மூலமான தீர்வு; அரசியல் ரீதியான தீர்வு.

ஒரு லட்சத்துக்கும் மேல் இலங்கைத் தமிழர்கள் இந்தியாவுக்கு அகதிகளாக வந்த பிறகும், இலங்கைத் தமிழர் பிரச்னையை எப்படி இலங்கையின் உள்நாட்டுப் பிரச்னை என்று சொல்லலாம்?''

சந்திப்பு:

**எஸ்.சந்திரமௌலி**



# கதை கதையாம்

தினமொரு கன்னிகையை மணந்து மகிழ்ந்துவிட்டு மறுநாள் காலையிலேயே அவளைக் கொலையும் செய்துவிடுவான். தினமொரு கன்னிப் பெண்ணாய்க் கொன்றால், மிச்சம் மீதி எத்தனை பேர்தான் இருப்பார்கள்?

எண்ணிக்கை இறங்குமுகமாகி ஒருநாளில் பூஜ்ஜியமானது. அப்போதும் அரசன் திருந்துவதாயில்லை. அரசனின் கொடூர மனத்தைத் திருத்தி, பாடம் கற்பிக்க ஒரு பெண் முன்வந்தாள். அவள் பெயர்தான் ஸ்சேகராசாத்.

மணமாகி முதல்நாள், முதலிரவு. அரசனிடம் அவளொரு கதை சொல்ல ஆரம்பித்தாள். ஆனால் அக்கதையை முழுவதுமாய்ச் சொல்லி முடிக்கவில்லை. மீதிக் கதையைக் கேட்க ஆசைப்பட்ட அரசனிடம் மறுநாள் சொல்கிறேன் என்று நழுவிவிட்டாள்.

கதையின் மீதியைக் கேட்டபின்பு அவளைக்



## www.arabiantales.org

### உலகின் முதல் தொடர்கதை

ஆயிரத்தொரு இரவுகள் கதை தெரியும். அதற்கும் ஒரு கதை உண்டு தெரியுமா?

பாரசீக அரசனான ஷார்யார் என்பவனுக்கு, ஆளவந்தான் கமல் மாதிரி பெண்களைக் கண்டாலே பிடிக்காது. இருந்தாலும் அவனுக்கு வினோதமான பழக்கமொன்று இருந்தது.

## www.nasruddin.org

### இக்கரைக்கு அக்கரை

முல்லா புகழ் நஸ்ருதின் வாழ்ந்தது அனடோலியா என்றழைக்கப்பட்ட தற்போதைய துருக்கி தேசத்தில்.

அவர் வாழ்ந்த பதின்மூன்றாவது நூற்றாண்டிலேயே முல்லாவின் பெயர் கிரேக்கத்தில் பிரபலமாகிவிட்டதாம். எனினும் அவரைப் பற்றிய கதைகளின் கையெழுத்துப் பிரதி பதினாறாம் நூற்றாண்டில்தான் கண்டெடுக்கப்பட்டது. ஒரு வகையில், சர்தார்ஜி ஜோக்குகளுக்கும் முல்லாதான் முன்னோடி.

நஸ்ருதீன் ஆற்றங்கரையில் உட்கார்ந்திருந்தார். எதிர்க்கரையிலிருந்து ஒருவன் அவரைப்பார்த்து கத்தினான்.

"ஏய்... நான் எதிர்க்கரைக்கு வரவேண்டும். எப்படி வருவது?"

"அங்கேயே இரு. ஏற்கெனவே நீ எதிர்க்கரையில்தான் இருக்கிறாய்."

***இன்னும் ரசிக்க வலைக்குள் செல்லுங்கள்!***





# காரணமாம்...

கொல்லலாம் என்று அரசனும் ஒரு நாளை ஒத்திவைத்தான். மறுநாளும் வந்தது. வழக்கம்போலவே கதை சொல்ல ஆரம்பித்த ஸ்சேகராசாத், அன்றும் கதையை முடிக்கவில்லை.

இப்படியாய் ஆயிரத்தொரு இரவுகள் கழிந்தன. அப்படி என்னதான் அவள் கதை சொன்னாள்?

சரித்திரம், மாயாஜாலம், காதல், சோகம், நகைச்சுவையோடு இடையிடையே ரொமான்டிக் கதைகளும் உண்டு.

ஒரு கதையோடு இன்னொரு கதை ஊடாடிக் கிடக்கும். உலகின் முதல் தொடர்கதையான இதில் அரசனின் அரக்கக் குணத்தைத் தெளிவிக்கும் அறிவுரைகளும் இழையோடின.

இடையே ஒரு நாளேனும் கதை முடிந்திருந்தால் அந்த அரசியின் கதையும் முடிந்திருக்கும். எனவே தொடர்ந்து கொண்டே இருந்தது. மற்ற பெண்களுக்குத் தோன்றாத இந்த

## வலையோடு விளையாடு

கதைசொல்லும் ஐடியா அவளுக்கு மட்டும் தோன்றியது ஆச்சர்யம்தான்.

உலகத்து எழுத்தாளர்கள் யாவராலும் புகழ்ந்து கொண்டாடப்படும் ஆயிரத்தொரு இரவுகள் இப்போது இணையத்திலும்.

இரவில் சொன்ன கதைகள்தான், ஆனால் பகலிலும் படிக்கலாம்; www.candlelightstories.com என்ற தளத்திலும்கூட.

## www.panchatantra.org

### கதைகேளு... கதைகேளு...

ஏறக்குறைய பதினைந்து நூற்றாண்டுகளுக்கு மேலாக சிறுவர்களாலும் இளைஞர்களாலும் விரும்பிப் படிக்கப்பட்டு வரும் பஞ்ச தந்திரக் கதைகளை எழுதியவர் விஷ்ணுசர்மா.

பொறுப்பின்றி வாழ்ந்துவந்த தனது மூன்று மகன்களைத் திருத்தி வழிநடத்த எண்ணிய மன்னன், அந்தப் பொறுப்பை விஷ்ணு சர்மாவிடம் ஒப்படைத்தானாம். அவர் நேரடியாக அறிவுரை சொல்லாமல், அரசிளங்குமாரர்களிடம் கதைகள் சொல்ல ஆரம்பித்தார். அக்கதைகளின் வழியாய் மிருகங்கள் பேசின. கடைசியில் விஷ்ணு சர்மாவுக்கே வெற்றி. தூங்கவைக்க மட்டுமல்ல, துயிலெழுப்பவும் கதைகளுக்கு சக்தி உண்டு.

- ஸாந்த்



# வானவில்லின் கையெழுத்து!

''இந்தியக் கலையின் காரணகர்த்தா 'மயன்' வானவில்லைப் போல ஏழு ரூபங்கள் எடுத்து தன் ஜாலங்களை நிகழ்த்த லலித் கலா அகாடமியின் அறைக்கு வந்து கையொப்பம் இட்டான்''

- இப்படித்தான் வர்ணிக்க இயலும் சமீபத்தில் நடந்த Art Confluent 2009 என்ற கண்காட்சியை. P. இளஞ்செழியன், A. விஜய குமார், மனிஸ் விஜயகுமார், சரவணகுமார், V. ரவீந்திரன், S. கார்த்திகேயன் உள்ளிட்ட ஏழு கலைஞர்களின் மரச் சிற்பம், மண் சிற்பம், உலோகச் சிற்பம் மற்றும் ஓவியம் என நான்கு பரிமாணங்களில் கலைச் சான்றுகள் காட்சிக்கு வைக்கப்பட்டு கண்களைக் கௌரவப்படுத்தின. ரூபாய் 20,000 முதல் ஒரு லட்சம் வரை வாங்கிச் செல்லவும் ரசிகர்கள் வந்திருந்தனர். அந்தக் கலைப் பிம்பங்கள் கொஞ்சம் உங்கள் காந்த ரசனைக்கு...

- அமிர்தா



* உலோகச் சிற்பம்

புகைப்படங்கள் :
மணிமேகலை நாகலிங்கம்

# இடி

வைத்தீஸ்வரன்

இன்று வாழைப்பழ வண்டிக்காரன் வழக்கம் போல் வரவில்லை. மணி நான்கைக் கடந்து விட்டது. தவறாமல் அவன் கூவலைக் கேட்டுப் பழகிய தோஷத்தால், என் கவனம் முழுவதும் தெரு வண்டிகளின் ஓசைகளிலேயே குவிந்திருந்தது. கடைசியாக முருகன் வண்டியைத் தள்ள முடியாமல் தள்ளியபடி தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டு வந்தான்.

அவன் கண்கள் கலங்கியிருந்தன. கால்களைச் சரியாக ஊன்ற முடியாமல் ஏதோ வலியின் வேதனையுடன் வண்டியின் மேல் பாரத்தைப் போட்டு நின்றான்.

''பழம் வேணுமா ஸார்?''

அவன் குரல் கம்மி இருந்தது.

''என்னாப்பா... முருகன் உடம்பு சரியில்லையா...?''

அவன் உதடுகள் துடித்துக் கொண்டன. யாரையோ கெட்ட வார்த்தைகளில் திட்டிக் கொண்டிருந்தான்.

''கபோதி... அவன் வைசூரி வந்து கண்ணு பொட்டையாகணும்.''

''என்னப்பா... விஷயத்தைச் சொல்லு. யாரைத் திட்டுறே...?''

''நான் பாட்டுக்குத் தெருவோரமா வண்டியை நிறுத்திக்கிட்டு இருந்தேன். ஒரு கார்க்காரன் வண்டி சக்கரத்திலே இடிச்சுட்டு நிக்காமலேயே போய்ட்டான். ஸார்.. சக்கரம் கட்டை விரல்லே இடிச்சு வலி உயிர் போவுது.''

முருகன் காலைப் பார்த்தேன். அவன் கால் கட்டை விரல் பெயர்ந்து ரத்தம் கசிந்து கொண்டிருந்தது.

''ஐயய்யோ...'' என்று கத்தினேன். அவன் வலி என்னை வேதனைப்படுத்தியது.

''காரை ஒரு நிமிஷம் நிறுத்தி இறங்கி வந்து 'ஸாரி.. ப்ரதர்'னு ஒரு வார்த்தை சொல்லியிருந்தாக்கூட மனசுக்கு ஆறுதலா இருக்கும். வலியைப் பொறுத்துக்கலாம்... ஆனா இந்த மாதிரி அயோக்யனைப் பொறுத்துக்கவே முடியல சார்...'' என்று குமுறினான்.

நான் வீட்டுக்குள்ளே போய் அவனுக்கு வலி மாத்திரையும், காலில் தடவிக் கொள்ள மருந்தும் கொண்டு வந்து கொடுத்தேன்.

''ரொம்ப டேங்க்ஸ் ஸார்'' என்றான்.

பாவம் அவன் இன்னும் பத்து தெருக்களாவது போய் வியாபாரம் செய்தால்தான் அன்றைய ஜீவனம் நடக்கும்.

உடம்பை நம்பி ஜீவனம் நடத்தும் இத்தகைய பாமரர்களுக்கு வாழ்க்கை எவ்வளவு பாதுகாப்பற்றதாக அநிச்சயமாக இருக்கிறது?

வண்டிக்காரன் தெருப்பக்கம் வந்து ஒரு வாரம் ஆகிவிட்டது. எனக்கு ஏனோ அடிக்கடி அவன் நினைவும், ரத்தம் கசிந்து கொண்டிருந்த அவன் கட்டை விரலின் காட்சியும் மனத்தில் ஒரு வருத்தத்தை ஏற்படுத்திக் கொண்டிருந்தன.

கடைசியாக வண்டிக்காரன் தெருக்கோடியில் இன்று வந்து கொண்டிருந்தான். சந்தோஷமாக இருந்தது.

இருந்தாலும் அவன் முகம் வாட்டமாக இருந்தது. குரல் ஏதோ வேதனையைத் தெரிவித்துக் கொண்டிருந்தது. காரணம் என்னவென்று விசாரித்தேன்.

அவன் சொன்ன அந்தச் சம்பவம் ஒரு உருக்கமான கதை போல் இருந்தது.

அடிபட்ட அன்று இரவு முழுவதும் முருகனுக்குத் தூக்கம் வராமல் புரண்டு புரண்டு படுத்துக் கொண்டிருந்தான்.

அந்த முகம் தெரியாத காரோட்டியின் மனுஷத்தன்மையற்ற செயலை அவனால் மன்னிக்கவே முடியவில்லை. அவனை நேரில் பார்த்தால் தாக்க வேண்டு மென்று அவன் கைகள் பரபரத் தன.

மறுநாள் அதே தெரு வழியாக வண்டியைத் தள்ளிக்கொண்டு போனபோது அவனுக்கு ஒரு ஆச்சரியம் காத்திருந்தது.

அவனுக்குத் தெரிந்த ஒரு கடைக்காரப் பையன் அவனைப் பார்த்து ஓடி வந்தான். ''அண்ணே அந்தக் கார்க்காரன் உன் வண்டியை இடிச்சிட்டுப் போனதை நானும் பார்த்தேன். அந்தக் காரு அடிக்கடி இந்த ரோட்டுப் பக்கமாத்தான் போவுது. நேத்து



அது இங்கே வந்தபோது அந்த கார் நம்பரை நோட் பண்ணி வைச்சிருக்கேன். எதுக்கும் இதைக் கையிலே வச்சிக்கோ. என்னிக்கா வது ஒங்கையிலே மாட்டாமலேயா போவான்...''

முருகனுக்கு அவன் வார்த்தைகள் நம்பிக்கை ஏற்படுத்தாவிடினும் சற்று ஆறுதலாக இருந்தன.

இரண்டு நாட்கள் கழித்து ஒரு பெரிய சாலையின் ஓரமாகப் பழ வண்டியை நிறுத்தி வைத்துக் கொண்டிருந்தான். அந்தச் சாலைக்கு எதிர்ப்புறம் பெரிய சினிமா கொட்டகை. ஜனநெருக்கடியும் வாகனங் களும் நிறைந்த மாலை நேரம். ஆட்டோக் காரர்கள் சினிமாவை விட்டு வெளியேறும் வாடிக்கை கும்பலுக்காக ஆவலுடன் காத்துக் கொண்டிருந்தார்கள். பச்சைக்கும் சிவப்புக்கு மாக மாறிய விதிகளுக்கு அடங்கியபடி போய்க் கொண்டிருந்தன வாகனங்கள்.

இப்போது சிவப்பு சிக்னல்...

எல்லா வண்டிகளும் அப் படியே நின்றன. முருகன் யதேச் சையாக, தன் வண்டிக்கு அருகில் வந்து நின்ற அந்தக் காரைப் பார்த்தான்.

கண்டவுடன் அவன் நரம்புகள் முறுக் கேறி ரத்தம் ஜில்லென்று மூளைக்கு ஏறியது. ஆமாம்.. அவனை இடித்து விட்டு தப்பித்துப் போன அதே கார்தான். அதே நம்பர்தான்..

முருகன் காரின் அருகில் ஓடிப் போய்க் கதவை ஓங்கி ஓங்கித் தட்டி, ''டேய் எறங்குடா... வெளியே வாடா...'' உறுமி னான்.

காரோட்டிக்கு விவரம் புரியவில்லை. பதற்றத்துடன் கதவைத் திறந்து வெளியில் வந்தான். அவன் அதிகம் வயதாகாத இளைஞனாக இருந்தான். என்ன நேர்ந்தது என்று அவனால் நிதானிக்க முடியவில்லை.

முருகன் அவன் முகத்திலும் நெஞ்சி லும் மாறி மாறி அறைந்தான்.

''ஐயய்யோ... ஐயய்யோ ஸார்.. ஸார்...'' என்று கைகளை மறைத்துக் கொண்டு பதறினான் இளைஞன்.

''என்னடா... அவ்வளவு தெனாவட்டா ஒனக்கு... மூணு

## சிங்கம் போல சிங்கிளா....



✱ ஷோபனா

*எல்லா சேனல்களிலும் காமெடி குயினாக வலம்வரும் ஷோபனாவிடம்... காமெடி நடிகைக்கு சினி ஃபீல்டில் மதிப்பிருக்கிறதா?*

''மனோரமா ஆச்சி, கோவை சரளாவுக்குப் பின் தமிழில் காமெடி நடிகைகளும் இல்லை. மதிப்பும் இல்லை. சினிமாவில் காமெடியன் திரையில் வரும்போது ஒரு காமெடி பட்டாளமே கூட இருந்து கிச்சுகிச்சு மூட்டும். ஆனால் காமெடி நடிகைகள் சீன்ல சிங்கிளாத்தான் வருவோம் சிங்கமாய். காமெடி நடிகைகளுக்கு சினிமாவை விட டி.வி.தான் திறமையை வெளிப்படுத்த சிறந்த இடம்.''

— ராகவ்குமார்

நாளைக்கு முன்னால முத்து தெருவுல இந்தப் பழ வண்டியை இடிச்சுட்டு காரை ஓட்டிக்கினு போனேயில்லே...?''

முருகன் மீண்டும் அடித்தான். இதைப் பார்த்துக் கொண்டிருந்த ஆட்டோக்காரர்கள் ஓடிவந்து அவர்களைச் சூழ்ந்து கொண்டார்கள்.

''பாருப்பா... இந்த ஆளு முந்தா நாளு வண்டி மேல இடிச்சிட்டு என் காலை ஒடிச்சிட்டுப் போயிட்டாம்ப்பா... பாரு என் கட்டை விரலை...''

ஆட்டோக்காரர்கள் முருகனுக்குப் பரிச்சயமானவர்கள். அந்த இளைஞனைச் சட்டையைப் பிடித்து இழுத்துக் கொண்டு கவரோரம் நிறுத்தினார்கள்.

''ஸார் ஸார் எனக்கு ஒண்ணும் தெரியாது. ஸார் நான் புதுசு ஸார். என்னை விட்டுடுங்க...'' அவன் கெஞ்சினான்.

''என்னடா தெரியாது? இந்த மாதிரிதான் எல்லோரும் சொல்றாங்க... வண்டிக்காரரு காலைப் பாத்தியா... எவ்வளவு காயம் பட்டிருக்கு. அதுக்கு என்னா பதில் சொல்றே...?'' ஒரு ஆட்டோக்காரன் முரட்டுக் குரல் கொடுத்தான்.

''ஸார்... நான் ஒண்ணும் தப்பு பண்ணல ஸார். தயவுசெய்து கேளுங்க ஸார்...''

அவர்கள் கேட்கத் தயாராயில்லை. இரண்டு ஆட்டோக்காரர்கள் அவனை உதைத்தார்கள்.

''டேய் மரியாதையா ஒத்துக்கினா நீ இங்கேருந்து பொழைச்சிப்பே. அவரு காலு அடிபட்டு நகம் பேந்து போயி வீங்கி இருக்கு. ரெண்டு நாள் வியாபாரம் போச்சு. இதுக்கு என்னா சொல்றே?''

''ஸார் நான் சொல்றதைக் கொஞ்சம் கேளுங்க ஸார்...''

''அந்தக் கதையெல்லாம் வேண்டாம். செஞ்ச தப்புக்கு இவருக்கு ஏதாவது



முருகனுக்கு இப்போது கட்டை விரல் காயம் மனதில் மாறாத வடுவாக மாறிக் கொண்டிருந்தது.

குடுத்துட்டுப் போனா நல்லது. இல்லையின்னா போலீஸ் ஸ்டேஷனுக்கு வா...''

இளைஞன் பேச்சற்றுக் கண்கலங்கி நின்று கொண்டிருந்தான். யாரும் நம்பத் தயாராக இல்லை. முருகனின் கட்டை விரலைப் பார்த்தான்.

அது வீங்கிப் போயிருந்தது. அவனுக்கு வருத்தமாக இருந்தது. தன் பையைப் பார்த்தான். அதில் இருந்த ஒரே ஒரு நூறு ரூபாய் நோட்டை எடுத்து கைகள் நடுங்க முருகனிடம் நீட்டினான்.

''வாங்கிக்கப்பா... வாங்கிக்க...'' ஆட்டோக்காரர்கள் முருகனை அவசரப்படுத்தினார்கள். முருகனுக்குத் தயக்கமாக இருந்தது. மற்றவர்களின் கட்டாயத்தை அவனால் தவிர்க்க முடியவில்லை. வாங்கிக் கொண்டான்.

''ஏதோ கெட்டவேளை தம்பி. நம்ம ரெண்டு பேருக்கும் நேரம் சரியில்லே. அவ்வளவுதான். இருந்தாலும் சின்னப் பையனா இருக்கே. இனிமேலாவது செஞ்ச தப்பை ஒத்துக்கணும். தெரியுதா? போய்ட்டு வா...''

இளைஞன் தடுமாற்றத்துடன் நடந்து போய் காருக்குள் உட்கார்ந்து கொண்டான். நடந்த நிகழ்ச்சியின் அதிர்ச்சியிலிருந்து அவனால் மீள முடியவில்லை.

காரை உடனே கிளப்ப முடியவில்லை. துக்கம் நெஞ்சை அடைத்துக் கொண்டது. கைக்குட்டையால் வாயைத் துடைத்துக் கொண்டான். ரத்தம் கசிந்திருந்தது.

முருகன் காருக்கு அருகில் போய் நின்றான். இளைஞன் கண்கள் சிவக்க முருகனிடம் சொன்னான்.

''அண்ணே... நான் இப்போ சொல்றதை அமைதியா கேட்க முடியுமா?''

''ம் சொல்லு...''

''நான் இன்னைக்கி காலையிலேதான் இந்த டிரைவர் வேலைக்குச் சேர்ந்தேன். நேத்து வரைக்கும் ஓனர்தான் ஓட்டிக்கிட்டு இருந்தாரு... என்னிக்கோ முதலாளி செஞ்ச தப்புக்காக இன்னிக்கு நான் அடி வாங்கறேன். இந்த ஆத்திரத்தை நான் போய் முதலாளிகிட்ட காட்டினா எனக்கு வேலை போயிடும். இதுதான் நிலைமை. நான் வரட்டுமா...?''

இளைஞன் காரைக் கிளப்பிக் கொண்டு போனான்.

முருகனுக்கு இப்போது கட்டை விரல் காயம் மனத்தில் ஆறாத வடுவாக மாறிக் கொண்டிருந்தது. இனி நான் சபிச்சதைப் போலத்தான் இவனும் என்னைச் சபிச்சுக்கிட்டு இருப்பானோ? ●



''தலைவரே! நமது ஜாதி ஒழிப்பு மாநாட்டில் கலவரம்; நூறு பேருக்கு மேல் காயம்.''

''நம்ம ஜாதிக்காரங்களுக்கு ஒண்ணும் ஆகலையே...?''

- ப்ரணா, ஹைதராபாத்

## நீங்கள் கேட்டவை - தராசு

● பா.அசோக், விருதுநகர்

? இலங்கைத் தமிழர் பிரச்னையை மைய மாக வைத்து, காங்கிரசுக்கு எதிராகக் குறும் படம் தயாரித்து, தேர்தல் பிரசாரத்துக்குப் பயன்படுத்தப் போகிறார்களாமே?

! அந்தக் குறும்படத்தில் நம் நாட்டுப் பிரதமர் ராஜீவ் காந்தி, மனித வெடிகுண்டினால் கொடூரமாகக் கொல்லப்பட்டதையும் அப்பாவித் தமிழர்கள் மனித கேடயமாகப் பயன்படுத்தப்படுவதையும் நிச்சய மாகச் சேர்க்க மாட்டார்கள். ஆனால், நம்மால் மறக்க முடியுமா?

● எல்லார், புதூர்

? தேர்தல் கமிஷன் விதிக்கும் அதிரடி உத்தரவுகளைப் பின்பற்றாத அரசியல் (வாதி) கட்சிகளை என்ன செய்வது?

! தேர்தல் கமிஷன் வகுக்கும் நெறி முறைகள் வேறு; சட்டம் வேறு. நெறிமுறைகள் பின்பற்றப்படாத போது, தேர்தல் கமிஷன் கண்டிக்கத்தான் முடியும். அரசியல்வாதிகள் (கட்சிகள்) திருந்த வேண்டும். திருந்தாத வர்களைத் தண்டிக்கும் ஆயுதம் மக்களிடம்தான் உள்ளது. அதைச் சிறப் பாகப் பயன்படுத்தும் ஆற்றல்தான் குறைவாக இருக்கிறது.

● ராஜம், சென்னை - 72

? ''ஐந்து வருடம் வேட்டி துவைப் பார். ஐந்து வருடம் சேலை துவைப் பார்'' என்று மிகவும் கேவலமாக,

● அடுக்காத பட்டம்!

# பா.ம.க.வின் ஐந்தாவது பல்டி..?





● 'துப்பாக்கி' மிரட்டல்! ● மாற்றும் ஆடைகள்!



ராமதாஸ் குறித்து விமர்சித்துள்ளாரே விஜயகாந்த்?

! கேவலத்தை விமர்சிக்க, அதனினும் கேவலமாக இறங்குவது கேப்டனுக்கு அழகல்ல.

● எம்.சிவசண்முகம், திருப்பூர்

**? பா.ம.க. ஐந்தாவது முறையாக, மீண்டும் பல்டி அடித்து அ.தி.மு.க. கூட்டணிக்குத் தாவியுள்ளதே?**

! அடுத்து, "எத்தனை சத்தியம் செய்தார்?" என்பீரா? எவ்வளவு பத்திரம் எழுதிக் கொடுத்தார் என்றும் எவ்வளவு சவுக்கடி வாங்கினார் என்றும் கேட்பீர் போலிருக்கே?! அரசியலில் நட்பு என்பது, இன்று அணிந்த பனியனை நாளை கழற்றிப் போட்டு வேறு பனியன் அணிவது போலத் தான் திருப்பூராரே!

● எம்.மிக்கேல்ராஜ், சாத்தூர்

**? பக்தி, பகுத்தறிவு இரண்டும் வெவ்வேறு பாதைகளில் சென்றாலும், பயணத்தின் நோக்கம் தேடல் மட்டும்தானே?**

! பக்தி, உணர்வின் தேடல்; பகுத்தறிவு புத்தியின் தேடல். பக்தியினால் மனசுக்கும் அதன் மூலம் உடலுக்கும், அதன் பின் விளைவாக முன்னேற்றத்துக்கும் ஏற்படும் நன்மைகளை, இன்று பகுத்தறிவும் புரிந்து கொண்டு உலகளாவிய அங்கீகாரம் அளிக்கிறது. இங்கேயுள்ள சில கிணற்றுத் தவளைகள்தான் ஏற்பதில்லை.

● ஜே.துரைராஜ், சென்னை-116

**? பாகிஸ்தான் உச்சநீதிமன்ற தலைமை நீதிபதியாக மறுபடியும் இஃப்திகார் சவுத்திரி பதவி ஏற்றது பற்றி...?**

! நீதி தாமதமானாலும் இறுதியில் வென்றே தீரும் என்பது மீண்டும் நிரூபண மாகிறது. இந்த நல்ல முடிவைத் தொடர்ந்து, நவாஸ் ஷரீஃபும் ஜர்தாரியும் ஒன்றுபட்டு, பொது எதிரியான தாலிபான் பயங்கரவாதத்தை ஒடுக்குவதில் கவனம் செலுத்தினால், பாகிஸ்தான் தப்பிப் பிழைக்கும்.



* நெஞ்சின் உரம்



* இரட்டிப்பு நிம்மதி!



* நேர்மை வாசகம்

● இதா முருகானந்தம், திருவைகாவூர்

**? ஊரை ஏமாற்றுந்தான் வோட்டுப் பெட்டி என முதல்வர் கருணாநிதி, ராமதாஸ் மீது சாடுவது ஏன்?**

! பாம்பின் கால் பாம்பறியாதா என்ன!

● சி.வசுமதி, வேங்கைவாசல்

**? ஆட்சியில் உள்ளவர்கள், தங்கள் பணிக்காலம் முடிவதற்கு ஆறு மாதங்கள் முன்பாகவே ஆட்சியை ஜனாதிபதி, ஆளுநர் ஆகியோரிடம் ஒப்படைத்து விட்டு, அடுத்து வரும் தேர்தலைச் சந்தித்தால் என்ன? இதற்கான சட்டத் திருத்தத்தைக் கொண்டு வருவார்களா நம் ஆட்சியாளர்கள்?**

! வெகு காலம் முன்பே ராஜாஜி கூறிய கருத்துதான் இது. ராஜாஜி சொன்னதையே கேட்காதவர்கள், வசுமதி கூறுவதையா ஏற்கப் போகிறார்கள்? அத்தகைய நெஞ்சுரமும் நேர்மைத் திறமும் எந்தத் தலைவரிடமும் இல்லை.

● எ.டபிள்யூ.ரபீ அஹமத், சிதம்பரம்

**? தமிழ்நாட்டில் உள்ள காங்கிரஸ் காரர்கள் நன்றாகப் பேசுகிறார்கள். ஆனால், எதுவாக இருந்தாலும் சோனி யாவைக் கேட்டுத்தான் சொல்ல முடியும்**

என்று சொல்லிவிடுகிறார்களே?

! அவ்வாறு சொல்வதற்கு அவர்களுக்கு அன்னை சோனியாவின் முழு அனுமதி உண்டு என அறிக!

● கே.ஏ.நமசிவாயம், பெங்களூரு ❑

? ஒரு வேட்பாளர் இவ்வளவுதான் செலவு செய்ய வேண்டும் என்று தேர்தல் ஆணையம் நிர்ணயித்திருந்தும் விண்ணப் பதாரர்கள் நேர்காணலில், ''எவ்வளவு செலவு செய்வீர்கள்?'' என்று கேட் கிறார்களே?

! வேட்பாளரின் வரம்பு மீறிய செலவை, கட்சிதான் செலவு செய்ததாகக் கணக்கில் கொண்டுவர வேண்டுமல்லவா? அதற்காகத்தான் கேட்டுத் தெரிந்து கொள் கிறார்கள்!

● லெ.நா.சிவகுமார், சென்னை-33

? பா.ம.க. தமது கூட்டணியை விட்டுப் போனதால், தமக்கு எவ்விதமான விரக்தியோ கோபமோ இடையாது; மாறாக, நிம்மதிதான் என்கிறாரே கலைஞர்?

! இருக்காதா பின்னே?

❑ ரூ.150/-பரிசு பெறுபவர் :

கே.ஏ.நமசிவாயம், பெங்களூரு

சஸ்பென்ஸ் கலைஞ்ச நிம்மதி ஒரு பக்கம்; சீட் மிச்சமான நிம்மதி இன்னொரு பக்கம். நாளைக்கு ஒரு வேளை இதனால் ஆட்சி பறி போனாலோ, நாலு பக் கமும் நிம்மதி!

● அ.யாழினி பர்வதம், சென்னை-78

? நடிகை நமீதாவுக்கு 'ஆறடி உயர ஆல்கஹால்' என்கிற பட்டப்பெயர் சூட்டப்பட்டுள்ளது பற்றி...?

! நமீதாவைக் கொண்டாடுவதாக நினைத்துக் கொண்டு, அவரையும் தங்களையும் ஒருங்கே அசிங்கப்படுத்திக் கொள்கிறார்கள், 'பட்டம்' சூட்டுபவர்கள்.

● எம்.இளங்கோ ஸ்ரீநிவாஸ், லால்குடி

? தீவிரவாதத்தின் பிறப்பிடம் வறுமையா? வக்கிர புத்தியா? வழிபாட்டு வேற்றுமையா?

! இந்த மூன்றையும் சாதகமாக்கிக் கொண்டு செய்யப்படும் மூளைச் சலவை!

● பி.தர்சினி, குடந்தை

? தனது துப்பாக்கி லைசென்ஸை ரத்து செய்த தேர்தல் அதிகாரியை முலாயம் சிங் மிரட்டியது குறித்து?

! தேர்தல் கமிஷன் தக்க நடவடிக் கையை உடனே எடுத்துவிட்டதே! முலாயமும் மற்ற அரசியல்வாதிகளும் இப்படி கமிஷனின் வேலைப் பளுவை அநியாயத்துக்கு அதிகரிப்பதுதான் சகிக்க வில்லை!



● அளித்த அனுமதி!

★ ரூ. 75/- பரிசு பெறுபவர் :

சு.வசுமதி, வேங்கைவாசல்

● பி.இராஜேந்திரன், லோயர் அணைக்கட்டு

? வாரியார் சுவாமி இப் போது இருந்தால், சரவண பவன் அண்ணாச்சிக்கு ஆயுள் தண்டனை விதிக்கப் பட்டதைப் பற்றி என்ன நினைப்பார்?

! 'கெடுவான் கேடு நினைப்பான்' என்றுதான் நினைப் பார்.



* சோஷியல் எஞ்சல்ஸ்

ஒரு டிரைவர் தப்பு பண்ணினா அதுக்குப் பேர் 'விபத்து'.

ஒரு விஞ்ஞானி தப்பு பண்ணினா அதுக்குப் பேரு, 'புதிய கண்டுபிடிப்பு'.

ஒரு அரசியல்வாதி தப்பு பண்ணினா அதுக்குப் பேரு, 'புதிய சட்டம்'.

ஒரு டைரக்டர் தப்பு பண்ணினா, அதுக்குப் பேரு, 'முயற்சி'.

ஆனா ஒரு மாணவர் தப்பு பண்ணினா, அதுக்குப் பேரு மட்டும் ஏன் 'தப்பு'ன்னு சொல்றாங்க...?



# மச்சி... நீ கூடவா

Vs

* யூத் ஸ்பைடர்ஸ்





ரிப்போர்ட்

"பசிபிக் பிச்சுல ஒரு பட்டர் பிளையோட இறக்கையில வர்ற சின்ன சேஞ்சுக்கும் அட்லாண்டிக் கடல்ல வர்ற புயலுக்கும் கனெக்ஷன் இது"-ன்னு சயன்ஸ் ஞானிங்க சொல்றாங்க! (யோவ் டுபாக்கூரு! தென்னை மரத்தில தேள் கொட்டினா பனை மரத்தில நெறி கட்டும்னு எங்க ஊரு கோவணக்கட்டி சொன்னதை இந்த விஞ்ஞானிங்க உல்டா பண்ணிட்டாங்க!) விஞ்ஞானிங்க சொன்னது நெசம்தான் ப்ரூவ் பண்ணாங்க இருதின்றலூர்ல (எப்பத்தான் அந்த ஊரு உக்காரும்?) இருக்கிற ஜெயா காலேஜ் ஸ்டூடன்ட்ஸ்.



# ஜெய்ச்சிட்ட!

"நான் சிரிச்சாலே போதும்.. உண்டியல்ல கைவிட்டுக் காசை அள்ளற மாதிரி வோட்டுகளை அள்ளிடுவேன்"



நோயாளி: காதுல டிரெயின் போற மாதிரி எப்பவும் சத்தம் கேட்குது டாக்டர்.

டாக்டர்: ('செக்கப்' செய்து விட்டு) அப்படி ஒண்ணும் கேக்கற மாதிரி தெரியலையே...

நோயாளி: அப்படின்னா டிரெயின் ஏதாவது ஸ்டேஷன்ல நிக்குதுன்னு நினைக்கறேன்.




மத்த காலேஜ் மாதிரி, வந்தோமா ஒரு ஆளை செலக்ட் பண்ணி குடுங்கம்மான்னு சீட்டைக் கொடுத்துட்டு, குத்தாட்டத்தை ஓசியில பாத்துட்டு வரலாம்னு பார்த்தா, எம்.பி. எலெக்ஷனோட ரியாக்ஷன் காலேஜ் மனசுலேயும் பரவியிருக்கு. (அந்த பட்டர் பிளை ஆக்ஷன் மாதிரி.)

நிலவரத்தை அம்புட்டுத் தெளிவா சொல்லிட்டு வோட்டு சீட்டைக் கொடுத்தா, 'மன்மோகன் சிங் மாதிரி ஒத்த ஆளு யாருன்னு டிக்ளேர் பண்ண முடியாது. இன்ட்ரஸ்ட் இருக்கிறவங்க எல்லோரும் நிக்கட்டும்'னு பலரும் கோஷம் போட, போட்டி பலமாயிடுச்சு. கூடவே நமக்கு ஏற்பாடு செஞ்சு கொடுத்த பேராசிரியர் பெருமாள், 'அதானே சார் ஜனநாயகம்'னு ஸ்டூடண்ட் பக்கம் சாய... ஜாலி எலெக்ஷனை எம்.பி. எலெக்ஷன்



என்னதான் நாய் நன்றியுள்ளதா இருந்தாலும் அதால 'தாங்க்ஸ்' சொல்ல முடியாதே...



★ பேராசிரியர் சுதா

கோயில் மணியை நாம அடிச்சா சத்தம் வரும். கோயில் மணி திரும்ப நம்மள அடிச்சா ரத்தம்தான் வரும்.

(எப்படித்தான் யோசிக் கிறாங்கன்னே தெரியலையே!)

''லாலாக்கி டோல் டப்பிமா - உங்க வோட் டெல்லாம் டோட்டலா எனக்குப் போடம்மா - ஏய் பப்பிமா''



மாதிரி நடத்த வேண்டியதாயிடுச்சி.

சோஷியல் ஏஞ்சல்ஸ்னு லக்ஷ்மி, ஜெனிபர், ஷகிலா, நந்தினி, அர்ச்சனான்னு ஐந்து பெண்களும், யூத் ஃபைட்டர்ஸ் குரூப்னு நரேந்திரன், ஸ்ரீதர், ரஞ்சித்குமார், ப்ரவீண்குமார்னு நான்கு ஆண்களும் களத்தில் குதித்தனர்.

ஒரு ஏஞ்சல், பாய்ஸ் பக்கம் போய் 'ப்ளீஸ்ப்பா என்னை ஜெயிக்க வைங்களேன்'னு சொல்ல ஐஸ்கட்டிகங்கள் ஜில்லுன்னு கரைஞ்சி போனாங்க. ஒரு பெண் கவிதை வாசித்து வோட்டு கேட்க, ஒரு மாணவர் ஒவ்வொரு பெண்ணிடமும் கும்பிடு போட்டுக் கெஞ்ச, என்னோட அழகுக்கு உங்க வோட்டு ஜுஜுபி என்கிற மாதிரி தெனாவட்டு சிம்பலா ஒருவர் நிக்க, ஒரு மாணவர் மட்டும் தனது சகாக்களை கூட்டிக் கொண்டு அசல் வோட்டு வேட்டை நடத்தி, கானா பாடல்களைப் பாடி





'மச்சி! நீ கூடவா ஜெயிச்சிட்ட' என்ற கோரஸுக்கு இடையில், பேராசிரியர் பெருமாளிடம் விருதைப் பெறுகிறார் 'வொய்ட்டோ' ஸ்ரீதர்




வினோத வாக்கு சேகரிப்பு நடத்தினார்.

வோட்டு எண்ணிக்கையிலும் எங்க ஆளுங்க கூட இருப்பாங்கன்னு அடம்பிடிச்சாங்க. எண்ணி முடிச்சா 'வொய்ட்டோ' ஸ்ரீதர்தான் ஜெயா காலேஜின் மிஸ்டர். பிரபலமாக பிரகாசமா ஜெயிச்சாரு. ஏம்மா இவரை செலக்ட் செஞ்சீங்கன்னு கேட்டா ஒரு ஏஞ்சலின் பதில்: ''இவன் ரொம்ம்ம்ப நல்லவன். ஃபிரண்ட்ஸை அவங்கவங்க பலம், பலவீனத்தோட சேர்த்து மதிக்கிறவன்.''

''எலெக்ஷன்ல ஜெயிச்சிட்டீங்க, அப்புறம் என்ன பண்ணுவீங்க?'' - ஸ்ரீதரிடம் கேட்டோம்.

மறுபடியும் எலெக்ஷன்ல நிப்பேன். அது ரியல் எலெக்ஷன்.''

அசல் எலெக்ஷன் பீலிங்கோட ஆபீஸுக்குத் திரும்பினோம், ரிப்போர்ட் எழுத...

– அமிர்தா, நளினி சம்பத்குமார்

# நேசக்குமிழி

அலாரம் அலறிக்கொண்டேயிருந்தது. படுக்கையில் புரண்டு புரண்டு தூக்கத்தை விரட்ட முயன்று, நேரத்தைப் பார்த்து பதறியபடி குளிக்க ஓடினான்.

சமையலறையைக் கடக்கும்போது யதேச்சையாய் பார்வை திரும்ப, சிவப்புப் புடைவையில், சின்னப் பின்னலில் ஈரம் சொட்டியபடி வேலையில் மும்முரமாய் இருந்தாள் அவள்.

''ரகு எழுந்தாச்சா? கொஞ்சம் இங்க வாயேன். இதைக் கொஞ்சம் எடுத்துக் கொடு'' அழைத்தாள் அவள்.

ரஞ்சனியா இது? தன் கண்ணையே நம்பாமல் மீண்டும் உற்றுப் பார்த்தான்.

''ரகு என்ன யோசனை, ப்ளீஸ் கொஞ்சம் ஹெல்ப் பண்ணு, நேரமாகுது'' என்றாள் சற்று அதட்டலாக.

இயந்திரமாய் அவள் சொன்னதைச் செய்துவிட்டு குளிக்கச் சென்றான், ரஞ்சனியைப் புடைவையில் பார்த்த அதிர்ச்சியிலிருந்து மீளாமல்.

சென்னையில் வசிக்கும் ரஞ்சனி, ரகுவின் அத்தை மகள். வேலை நிமித்தமாக பத்து நாட்கள் ரகு வீட்டில் தங்கி ஆராய்ச்சிக் கட்டுரை தயார் செய்ய வந்தாள்.

எண்ணற்ற கனவுகளுடன் அவளை அழைத்துவர ரயில் நிலையம் சென்ற ரகுவுக்கு, டீ-ஷர்ட், ஜீன்ஸ் பேண்ட், வெட்டிய தலைமுடி, கூலிங்கிளாஸ் என ரஞ்சனியைப் பார்த்ததும் அதிர்ச்சி. இத்தனை மாடர்னாக அவளை எதிர்பார்க்கவில்லை. பத்து ஆண்டுகளுக்கு முன்பு பாவாடை சட்டையில் விளையாடியவளா இவள்? ஆச்சரியத்தின் மீது அச்சம் படர்ந்தது.

ஆனால், ரஞ்சனியோ வீட்டுச் சூழலில் சட்டெனப் பழகிக் கொண்டாள். உடைதான் மாறியிருந்தது; சிறு வயதில் இருந்த அதே பொறுமைக்குணம் இன்றும் அப்படியேயிருந்தது.

ரகுவுக்கு ரஞ்சனி மேல் ஓர் ஈர்ப்பும், அபரிமிதமான அன்பும் இருந்தன. அவளின் டிரஸ் கோட்தான் அவனை சகஜமாய்ப் பழகவிடாமல் தடுத்தது.

காலை நேரங்களில் செல்லில் யாருடனோ பேசியபடி, விதவித மாடர்ன் உடைகளில் தென்படுவாள். சமையலிலும் அம்மாவுக்குச் சின்னச் சின்ன உதவிகள் செய்வதைப் பார்த்திருக்கிறான்.

''என்ன ரகு குளிக்க இவ்வளவு நேரமா?'' ரஞ்சனியின் அதட்டலில் நினைவுகளிலிருந்து மீண்டு அவசரமாய்க் குளியலை முடித்தான்.

''அம்மா எங்கே?''

''அத்தைக்கு உடம்புக்கு முடியல. இன்னைக்கு என் சமையல்தான். சகிச்சுக்கோ'' என்றாள் புன்னகையோடு.

ரஞ்சனிக்குள் இப்படியொரு உருவமா? நினைத்தபடி வீட்டை நோக்கினான். வீட்டின் சூழலே மாறியிருந்தது. வழக்கமாய் அலறும் டேப் இன்று யேசுதாஸின் மெல்லிய குரலைக் கசிந்து கொண்டிருந்தது. அழகாய் அலங்கரிக்கப்பட்டு, பூஜைக்கு வேண்டியவை அனைத்தும் தயாராய் இருந்தன.

புடைவையில் ஓர் தேவதையாய் வீட்டில் அவள் வலம் வருவது ரகுவின் மனத்தில் இன்ப இம்சையை உண்டாக்கியது. கண்கள் அவளை விட்டு அகலாமல் ரசித்துக் கொண்டு நின்றன. பேசமுயன்று தோற்றுப் போனான்.

''ரஞ்சனி இன்னைக்கு சாயந்திரம் என்னோடு கோயிலுக்கு வர்றியா?'' என்றான்

மெல்லத் தயங்கியவாறே!

''தாராளமா!''

**மா**லையில் கோயிலுக்கு அழைத்துச் சென்றான். தரிசனம் முடிந்து இருவரும் பேசாமல் நடந்தார்கள்.

''ரஞ்சனி உன்கிட்ட ஒண்ணு சொல்லணும்!''

''சொல்லு ரகு''



''உனக்கு என்னைப் பிடிச்சிருக்கா?''

''என்ன கேள்வி இது? உன்னைப் பிடிக்கும்.''

ரகுவின் மனத்தில் பட்டாம்பூச்சிகள் சிறகடிக்கத் தொடங்கின. இன்றே, இப்பொழுதே சொல்லிவிட வேண்டும் எனத் தீர்மானித்தான். மனத்துக்குள் ஏதேதோ கற்பனைகள் தோன்றின. நிறையப் பேச நினைத்தவன்,

''ரஞ்சனி நாம கல்யாணம் செய்து கொண்டால் என்ன?'' என்று ஒற்றை வரியில் சற்றே பயத்துடன் கேட்டான்.

ரஞ்சனி ஒரு கணம் அவனை உற்று நோக்கினாள். ''என்ன திடீர்ன்னு இப்படியொரு கேள்வி?''

''உன் மேல் காதல் தான். சொல்ல முடியாம தவிச்சேன். இப்போதான் சொல்ல முடிந்தது'' தயங்கித் தயங்கிச் சொன்னான்.

''இன்று மட்டும் சொல்ல ஏதாவது காரணம் இருக்கா?''

''காரணம் இருக்கு. இன்று என் பழைய

● குறிஞ்சி. ஸ்ரீமதி

ரஞ்சனியைப் பார்த்தேன், மனசு நிறைந்தது. அதுதான் உடனே சொல்லிட்டேன்.''

''ம்ம்ம்...'' சற்று உற்றுப்பார்த்தாள். பின் அமைதியாய் இருந்தாள்.

''என்ன ரஞ்சனி ஒண்ணுமே பேசலை, பிடிக்கலையா, நான் ஏதாவது தப்பா சொல்லிட்டேனா?''

''அப்படி ஏதுமில்லை, நான் உடனே பதில் சொல்லணுமா?''

''அவசரம் இல்லை, யோசிச்சு சொல்லு''

சட்டசபையில் விலைவாசி குறித்த விவாதத்தில் எதிர்க்கட்சி உறுப்பினர் (கிண்டலாய்): புளி விலை குறைந்துள்ளதே... அது யார் சாதனை?

அறிஞர் அண்ணா (அமைதியாய்) : அது புளிய மரத்தின் சாதனை!

- மஞ்சுதேவன்



''நான் ஊருக்குப் போறதுக்குள்ள சொல்றேன்''

''சரி''

அதன்பின் ஒன்றும் பேசாமல் வீடு திரும்பினர்.

ரகு காதலைச் சொல்லி நான்கு நாட்கள் ஓடிவிட்டன. அதன் பின் ரஞ்சனி எதும் பேசவேயில்லை. இன்று ஊருக்குப் போகப் போகிறாள். என்ன சொல்லப் போகிறாள்? முன்னதாகவே அலுவலகத்திலிருந்து வீட்டுக்கு விரைந்தான். வீட்டில் ரஞ்சனி இல்லை. அவள் உடைமைகளும் இல்லை. காலையிலேயே ஊருக்குக் கிளம்பிவிட்டதாக அம்மா சொன்னார்.

ச்சே... இப்படி சொல்லாமல் போய்விட்டாளே, ஏன் இப்படிச் செய்தாள்? உடை கூட மாற்றாமல் யோசித்தபடி உட்கார்ந்திருந்தான்.

''இதை உன்கிட்ட கொடுக்கச் சொன்னா.'' அம்மா ஒரு கவரை நீட்டினாள். அவசரமாய் வாங்கிப் பிரித்தான்.

அன்பு ரகு,

உன்னிடம் சொல்லாமல் போகிறேன் என்று கோபிக்காதே. எனக்கு உன் மீது அன்பு இருக்கிறது. ஆனால் காதல் இல்லை. இதை நேரடியாகச் சொல்லி உன்னைச் சங்கடப்படுத்த விரும்பவில்லை.

ரகு, உனக்கான வாழ்க்கைத் துணை நானில்லை. உன் எதிர்பார்ப்புக்கும் வரையறைக்கும் உள்ளே என் வாழ்க்கை முறை இல்லை. எல்லாப் பெண்களையும் போல் புடைவை கட்டி சமைக்கப் போட்டு வீட்டில் வட்டமடிக்கிற பொண்டாட்டியா நான் இருக்க முடியாது. எனக்கென்று ஒரு தனிப்பாதை. சின்னச் சின்ன சேவைகள், ஆராய்ச்சின்னு...

நான் வந்து தங்கிய முதல் நான்கு நாட்களில் வராத காதல், என்னை ஒரு சராசரிப் பெண்ணாய்ப் பார்த்தபோது தான் வந்தது! அந்த சராசரித்தனம் என்னிடம் மறையும் போது உனக்குச் சலிப்பு வந்திடும்.

புரிதலற்ற ஈர்ப்பு காதல்ல...

உன் அன்பின் நினைவுகளை, தோழமையின் பெயரால் என்னுடனே எடுத்துச் செல்கிறேன். அது போதும். பை!

அன்புடன்

ரஞ்சனி



''முள்கரண்டியால வெள்ளரி பத்தையை குத்தித் தின்னதுக்கு, உன் அக்கா உன்னை அடிச்சாளே, ஏன்?''

''அந்த வெள்ளரி பத்தையை அவ 'கண்'மேலே வைக்கப் படுத்திருந்தா!

- வெ.சீதாராமன்

‘ஒரு மந்தையிலிருந்து இரண்டு கரடிகள் வேறு வேறு திசைகளில் பிரிந்தன. மீண்டும் சந்தித்தபோது, பேச முடியவில்லையே’னு ஓல்ட் டயலாக் எல்லாம் வேண்டாம். நச்னு ஒரு கமெண்ட் எழுதுங்க கரடி படத்துக்கு.

கூடவே, கீழேயுள்ள படத்துக்கு ஏற்ற மாதிரி ஜிலீர்னு ஒரு கவிதை எழுதி (பத்து வரிகளுக்கு மிகாமல்) அனுப்புங்க. மேகம், நிலா, வானம், மழை, வானவில், ஆடு, காக்கா... உங்களுக்குத் தெரியாத சொற்களா? இரண்டையும் ஒரே போஸ்ட் கார்டில் எழுதி முகவரி பகுதியில் கூப்பனை ஒட்டி அனுப்புங்கள். பரிசு உண்டு. ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.

**முடிவு தேதி: 17.4.2009**



## போட்டோ போட்டி

ஆசிரியர் - கல்கி
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல்,
சென்னை - 600 032



# போட்டோ போட்டி

உங்களுக்குத் தகுதியான வேலை கிடைக்கலாம். ஆனால், கிடைக்கும் வேலையில் திருப்தியும் இணைந்து கொண்டால் நீங்கள் அதிர்ஷ்டமானவர் தான். இதை ஏன் சொல்கிறேன் என்றால், பலர் சம்பளம் மற்றும் வேறு சில அம்சங் களை மட்டும் பார்த்து முதலில் வேலைக் குச் சேர்ந்து விடுவார்கள். பின்னர் சேர்ந்து சில மாதங்களே ஆன நிலையில் 'அவசரப் பட்டு விட்டோமோ?' என்று யோசிக்கத் துவங்குவார்கள். உலகில் உள்ள நிறுவனங் களில் வேலை செய்பவர்களில் ஐந்தில் ஒருவர் மாறிக் கொண்டே இருக்கிறார் என்பது ஒரு புள்ளி விவரம். மாற்றம் ஒன்றுதான் மாறாதது என்ப தால், எதிர்காலத்தைக் கணக்கில் வைத்து வேலை மாறுவதில் தவறில்லை, இதை strategic shift என்பார் கள். ஒருவர் வேலை மாறு வதற்கு மூன்று வகையான காரணங்கள் இருக்கின் றன:

முதலில் Push factor. ''இந்த நிறுவனத் தில் நடக்கும் பல விஷயங் கள் எனக்குப் பிடிக்க வில்லை. பாஸ் ரொம்ப முசுடு. என்னதான் மாங்கு மாங்கென்று வேலை செய் தாலும், ஒரு பாராட்டு கிடை யாது. வேறு நிறுவனமாக இருந்தால் பாராட்டுடன் இன்சென்டிவ் கொடுப்பார் கள். இங்கு வேலை செய் வதில் ஒரு பயனுமில்லை'' என்று முடிவு செய்து வேலை மாறுவது Push factor. அடுத்த தாக Pull factor. ''அந்த நிறுவ னத்தில் என்னைப் போன்றே தகுதி பெற்று பணி செய்ப வருக்கு, என்னை விட நாற்பது சதவிகிதம் அதிகச் சம்பளம். வெளியே போனால், என் தகுதிக்கு மானேஜர், ஜி.எம்., சி.இ.ஓ. என்று உயர்வதற்கு வாய்ப்புகள் உண்டு. நான் ஏன் இங்கே முடங்கிக் கிடக்க வேண்டும்?'' என்று மாறுவதுதான் Pull factor. மூன்றாவதாக Trigger factor என்று ஒன்றிருக்கிறது. உங்கள் எம்.டியோ, மானேஜரோ ''யூ ஆர் யூஸ்லெஸ்... உன்னை யெல்லாம் வச்சிட்டு என்ன பண்றுவது?'' என்று விஷயங்களை ஆராய்ந்து பார்க் காமல் திட்டும்போது, உங்கள் ரத்தம் சூடேறி, கால் கடிதாசியை எழுதி வீசி விட்டு வருகிறீர்களே அதுதான் Trigger factor.




மாறுதல் என்பது வளர்ச்சியின் தெர்மா மீட்டர் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், எதற்காக மாறுகிறீர்கள் என்ப தைத்தான் முதலில் பார்க்க வேண்டும். சம்பளத் தொகை நூறு, இருநூறு அதிகமாகக் கிடைக்கிறதென்று மாறாதீர்கள். ''நான் இப்போது இருக் கும் வேலையில், என்னிடமுள்ள முழுத் திறன்களையும் பயன்படுத்த வேண்டிய அவசியம் வரவில்லை. எனவே அந்தத் திறன் களைப் பயன்படுத்திக் கொள்ளும் வாய்ப்பு கிடைக்கும் வேலைக்கு மாற நினைக்கிறேன்'' என்பது ஒரு மனநிலை. ''நான் இப்போது செய்யும் வேலையில் நிறைய திறன் கள் தேவைப்படுகின்றன. ஆனால், அவை எனக்கு இல்லாத

## 'மாஃபா' பாண்டியராஜன்

தால் பல பிரச்னைகள். எனவே என் தகுதிக்கேற்ப வேறு வேலைக்கு மாறுகிறேன்'' என்று முடிவு செய்வது மற்றொரு கண்ணோட்டம். ''எனக்கு எல்லா வகையான திறன்களும் இருக்கின்றன. ஆனால், இதே நிறுவனத்தில் எனக்கு பிரமோஷன்கள் கிடைக்க வாய்ப்பில்லை. எனவே ஏறுமுகமாக என் வாழ்க்கை அமைய வேண்டுமென்றால் மாற்றம் தேவை'' என்று உணருவது ஒரு நிலைப்பாடு.

நீங்கள் உங்கள் கேரியரில் எத்தனை முறை வேண்டுமானாலும் மாறிக் கொண்டே இருக்கலாம். ஆனால், நீங்கள் ஒரு வேலையை விட்ட பின் உங்களை மெச்சுவதற்கு மிகக் குறைந்த நபர்களே இருப்பார்கள். உங்கள் தன்னம்பிக்கையைத் தடுமாற வைக்கும் அளவுக்குச் சூழ்நிலைகள் மாறும். ஆனால், எடுத்த காரியத்தில், கொண்ட லட்சியத்தில் உறுதியாக இருந்தீர்கள் என்றால், உங்களை யாரும் அசைக்க முடியாது.



# மாற்றம் தேமாற்றம்!

பொறியியல் படித்து அகமதாபாத் ஐ.ஐ.எம்.மில் நிர்வாகவியல் முடித்து பிலிப்ஸ் நிறுவனத்தில் கை நிறைய காசு பார்த்துக்கொண்டிருந்தவர் விஜய்மகஜன். சமூகத்தின் அடித்தட்டு மக்களுக்குப் பயனளிக்கும் விதத்தில் தன் வாழ்க்கை அமைய வேண்டும் என்று முடிவு செய்த மகஜன், தன் வேலையை தைரியமாகத் தூக்கியெறிந்துவிட்டு 'பிரதான்' என்ற தொண்டு நிறுவனத்தைத் துவக்கினார். அதைத் தொடர்ந்து கிராமத்து ஏழை மக்களுக்கு கடன் வசதியைச் செய்து கொடுக்கும் 'பாஸிக்ஸ்' என்ற மைக்ரோ பைனான்ஸ் அமைப்பைத் துவங்கினார். இன்று வட இந்தியாவில் சுமார் ஏழாயிரம் கிராமங்களில் பாஸிக்ஸ், ஏழை கிராம மக்களுக்கு அவர்கள் தேவைகளை ஈடுகட்ட, கடன் கொடுத்து வருகிறது. வேலையைத்



## ஆயிரத்தில் ஒருவன்

தூக்கிப் போட்டு லட்சியத்தில் உறுதி காட்டிய மகஜன், இன்று பல உயர்ந்த விருதுகளுக்குச் சொந்தக்காரராகியிருக்கிறார். வாழ்க்கையில் ரிஸ்க் எடுங்கள். ஆனால், அந்த ரிஸ்க் என்பது உங்கள் தகுதிகளை உணர்ந்து அறிவுபூர்வமாக எடுக்கப்படுவதாக இருக்க வேண்டும்.


• மகாஜன்

தகுதிகளை வளர்த்துக் கொண்டே வருவது மாற்றத்துக்கான தூண்டுகோலாக இருக்கும். ஏற்கெனவே நான் சொன்ன KASH (Knowledge, Attitude, Skill, Habit) உங்களிடம் எவ்வளவு இருக்கிறது என்பதை அவ்வப்போது மதிப்பீடு செய்து கொண்டு வரவேண்டும். நல்ல மனிதவள ஆலோசனை நிபுணரிடம் உங்கள் தகுதிகளை மதிப்பீடு செய்யச் சொல்லலாம். அதே சமயம் பத்திரிகைகளில் வாய்ப்புகள் எங்கே வருகின்றன என்பதைப் பார்த்துக்கொண்டே இருங்கள். உங்கள் தனி மனித தகுதிகள் ஒட்டுமொத்த வளர்ச்சி பெற்றதாக மாறிக்கொண்டிருக்க வேண்டும்.



நல்ல நிறுவனமாகத் தேர்வு செய்து முதல்படியான வேலை வாய்ப்பைப் பெறுவதற்கும், கிடைத்த வேலையைத் தக்க வைத்துக் கொள்வதற்கும் வாழ்க்கையில் உயர மாற்றங்களை எதிர்கொள்ளத் தயாராவதற்கும், இந்தத் தொடரில் ஆறு கதவுகளைத் திறந்து வழிகாட்டியிருக்கிறேன். இப்போது ஏழாவது கதவாக நான் திறப்பது Self - Role - Identity. Self என்றால் நான் யார், எனக்கென்ன தகுதி, அதாவது KASH என்னவென்பதை உணருவது. Role என்பது நிறுவனத்தில் உங்களுக்குக் கிடைத்த வேலை அல்லது பாத்திரம். Identity என்பது அந்த வேலைக்கும் பாத்திரத்துக்கும் நீங்கள் எப்படி பொருத்தமானவராக ஆகிறீர்கள் என்பது. தகுதியை வளர்த்துக்கொண்டு, அதற்கேற்றபடி நல்ல வேலையைப் பெற்று அந்த வேலைக்குப் பொருத்தமாக உருவாக வேண்டும். இது ஒரு சாதாரண நிலை. ஆனால் இது போதாது. நீங்கள் ஆயிரத்தில் ஒருவனாக மாற வேண்டுமானால் உங்கள் திறமைகளும் செயல்பாடுகளும் பாத்திரம் கடந்ததாக இருக்க வேண்டும். இதற்குச் சரியான உதாரணம், முதல் அத்தியாயத்தில் நான் குறிப்பிட்ட குமரகுரு. எங்கள் நிறுவனத்தில் டேட்டா என்ட்ரி ஆபரேட்டராகப் பணியில் சேர்ந்த கிராமத்து இளைஞன் குமரகுரு. இன்று அமெரிக்காவில் உள்ள புகழ் பெற்ற நிறுவனத்தில் தலைமை நிர்வாக அதிகாரியாக உயர்ந்ததெப்படி? இதுதான் பாத்திரம் கடந்த வெளிப்பாடு என்பது.

இந்தத் தொடரின் இறுதி Blog ஆன இதை, கொஞ்சம் மகிழ்ச்சியான செய்தியுடன் முடிக்கும் வாய்ப்பு கிடைத்திருக்கிறது. ஐந்தாறு மாதங்களுக்கு முன்னர் உலகப் பொருளாதார சுணக்கம் காரணமாக மற்ற துறைகள் பாதிக்கத் துவங்கியது போல ஆட்டோமொபைல் துறை ஆட்டம் கண்டது. அமெரிக்காவில் ஜெனரல் மோட்டார்ஸ் தொழிற்சாலை மூடும் நிலைக்கு வந்து விட்டது. இந்தியாவில் கார்கள், வாகனங்கள் தயாரிக்கும் நிறு வனங்கள் தங்கள் வேலை நாட்களை வாரத்துக்கு மூன்று தினங்களாகச் சுருக்கிக்கொண்டன. லட்சக்கணக்கான தொழிலாளர்கள் பாதிக்கப்பட்டார்கள். தேவைகள் குறை யத் துவங்கியது ஒரு காரணம் என்றால், பல மாநிலங்களில் இருந்த கடுமையான மின்வெட்டும் இதற்கு ஒரு காரணம்.




கடந்த வருடம் ஏப்ரல் - அக்டோபரில் கிட்டத்தட்ட ஒன்பது சதவிகிதம் வளர்ச்சி விகிதத்தைக் கண்ட இந்தத் துறை, அக்டோ பருக்குப் பின் சரியத் துவங்கியது. பிப்ரவரி மாதம் ஆய்வு செய்து பார்த்ததில் வாகனங் கள் விற்பனை 24 சதவிகிதம் வீழ்ச்சிய டைந்திருப்பது தெரியவந்தது. டிமாண்ட் குறையும் போது மக்களை வாங்க வைக்க ஒரே வழி விலைக் குறைப்புதான். அந்த வகையில் நான்கு சதவிகிதம் 'வாட்' வரியை வாகனங்களுக்குத் தள்ளுபடி செய்தது மத்திய அரசு. இந்தச் சலுகையை அப்படியே நுகர்வோருக்கு அளித்தன நிறுவனங்கள். அதே சமயம், ஆறாவது சம்பளக் கமிஷன் நிலுவைகள் மத்திய அரசு ஊழியர்களின் பர்ஸைக் கனமாக்கவே, கார்கள் வாங்குவோர் எண்ணிக்கை ஏறத் துவங்கியது. பொதுத்துறை ஊழியர்களும் கணிசமாக நிலுவைத் தொகை பெற்றனர். ஆகவே இத்துறை தள்ளாட்டத்திலிருந்து விடுபடத் துவங்கியிருக்கிறது. கார்களின் ஏற்றுமதியும் கணிசமாக அதிகரித்து வருகிறது. 2010 - 11ல் மாருதி ஒன்றரை லட்சம் கார்களை ஏற்றுமதி செய்யவுள்ளது. அதேபோல பேருந்துகள் விற்பனையிலும் விறுவிறுப்பு காணப்படுகிறது. தேர்தல் வேறு வந்துவிட்டபடியால் கூடுதல் ஆறுதலாக வாகனங்களுக்கான தேவை தற்காலிமாக அதிகரித்து வருவதால், விற்பனையும் உயர்ந்து வருகிறது. தேர்தலுக்குப் பிறகு பொறுப்புக்கு வரும் மத்திய அரசு ஆட்டோமொபைல் துறைக்குக் கைகொடுக்கும் அளவுக்குத் தனது கொள்கைகளை வகுக்க வேண்டும்.

**உங்கள் ஒவ்வொருவருக்கும் இந்தத் திறமைகள் உள்ளுக்குள் இருக்கும். அவற்றை வெளிக்கொணரும் வாய்ப்பு களை அடையாளம் கண்டு மாற்றத் துக்குத் தயாராகுங்கள். ஒளிமயமான எதிர்காலத்துடன் ஆயிரத்தில் ஒருவனாக உருவாக என் வாழ்த்துக்கள். ஆல் த பெஸ்ட்!**

எழுத்தாக்கம் : **ஸ்ரீநி**

**(நிறைவுற்றது)**

# சினி சிப்ஸ்




பட்டாளம் படத்தில் இளசுகளோடு கும்மாளமிட்டதில் நதியாவுக்கு ஏக சந்தோஷமாம். போதாததற்கு நதியாவை நடிக்க வைத்தாலே அந்தப் படம் ஹிட் என்ற கோடம்பாக்க ஜோசியத்தால் நதியாவின் கால்ஷீட் டைரி நிரம்பி வழிகிறதாம். ஆனால் அம்மணிக்கு ஒரு படத்திலாவது ஆக்ஷன் ரோலில் நடித்துவிட வேண்டுமென்று ஆசையோ ஆசையாம்!

**(ஆசை, தோசை, அப்பளம்... அப்ப ஹீரோக்கள் என்னாவது?!)**

கந்தசாமி படத்திலிருந்து 'சீயான்' விக்ரம், 'சூப்பர் ஹீரோ' விக்ரம் ஆகிறார். இந்தப் படத்தில் அனைத்துப் பாடல்களையும் விக்ரம் பாடியிருந்தாலும், ஒரே ஒரு பாடலை, கவிஞர் விவேகா பாடியிருக்கிறாராம். தவிர, எல்லாப் பாடல்களையும் எழுதியதும் விவேகாதான்.

**(எப்ப கவிஞரே ஹீரோவாகப் போறீங்க?)**

நடிகை சினேகா, கையில் துப்பாக்கி தூக்கிக் கொண்டு ஆக்ஷன் ரோலில் இறங்கிவிட்டாலும், அம்மணிக்கு இன்னும் டூயட் பாடும் ஆசை விடவில்லையாம். அதனால் இளசுகளோடு நடிக்க அம்மாவைத் தூது விட்டாராம். பலன், கை மேல் கிடைத்திருக்கிறது. விரல் நடிகரின் ஒரு படத்தில் அம்மணிக்கு ஃப்ளாஷ்பேக் காட்சியில் மெயின் ரோலாம்.

**(ப்ளாஷ்பேக் ஒரேயடியா பேக்குக்குக் கொண்டுட்டுப் போயிடாம இருக்கணுமே?)**

இப்போது சிம்பு வாயைத் திறந்தால் 'த்ரிஷா'வைப் பற்றித்தான் புகழ்ந்து தள்ளுகிறாராம். கௌதம் வாசுதேவ் மேனன் படத்தில் 'சிம்பு-த்ரிஷா' காம்பினேஷனில் படம் படுஷார்ப்பாக வருவதில் சிம்புவுக்கு கொம்பு முளைக்காத குறையாம்.

**(வம்பு வராம இருந்தா சரி!)**

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / CC (S) DN / 144 / 09 -11 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 09 - 11* Registered as a Newspaper in Srilanka.

# Dr. KAMAKSHI MEMORIAL HOSPITAL

#1.RADIAL ROAD, PALLIKARANAI, CHENNAI- 600 100

PH: 22469200 66300300 9840049561. FAX: 22463282 66300400

E-mail: info@drkamakshimemorialhospital.org. Webside: drkamakshimemorialhospital.org.





Dr. T.G.Govindarajan

President - Founder - Medical Director

Dr.Kamakshi Memorial Hospital, Pallikaranai about 2kms from Velachery, is a 150 bedded super specialty hospital has created great strides in the field of health care in a very short duration. Started just three years ago, the hospital has turned out to be a referral institution. It has borne all specialties and state-of- the art facilities under roof. However it has evolved as a main referral centre in fields such as Cardiology, Cardiothoracic surgery, neurology and neuro surgery and Cancer treatment. Being the only major hospital in this part of the city, the hospital has evolved as a major trauma care centre. With round-the- clock casualty serviced and ICU managed in house intensivists it has saved many lives of accident victims. The hospital is also planning for an on-going trauma awareness and preventive programme. The hospital is the only one of its kind in this part of the world having all specialists starting from General Medicine & Intensive Care through Radiation Oncology services under one roof. The hospital has well qualified specialists offering high quality services in various specialities of Medicine & Surgery. Recently the hospital has the pride of inaugurating PET CT – the first of its kind in Tamilnadu in collaboration with Cancer institute, Adyar.

Principle: The guiding principle of the hospital is to offer the ***latest in health care facilities at Par with international standards (obviating the need to go abroad for treatment) and also make them available to increasing numbers of our population.***

To meet the stringent demands of quality health care the services of several talented and dedicated medical professionals (both within the country and overseas) has been and a huge investment made in infrastructure and medical equipments.

***ALL FACILITIES UNDER ONE ROOF.***



CT-SCAN



LINAC



CATH LAB



CABG – UNDER PROCESS



NEURO SURGERY



PET-CT – FIRST IN TAMILNADU

CARDIOLOGY, NEUROSURGERY, LAPAROSCOPY & ENDOSCOPY, CARDIAC SURGERY, NEPHROLOGY, OBSTERTICS & GYNAECOLOGY, TRAUMA CARE, ORTHOPAEDICS, GASTROENTEROLOGY, NEUROLOGY, NUCLEAR MEDICINE, ENT & OPHTHALMOLOGY, UROLOGY, BLOOD BANK, MAXILLOFACIAL SURGERY, ONCOLOGY – SURGICAL – RADIATION & MEDICAL ONCOLOGY

PET CT CENTRE AT CANCERINSITUTE (WIA)CANAL BANK ROAD, GANDHI NAGAR, ADYAR,CH-20

24 HRS PHARMACY & AMBULANCE SERVICES AVAILABLE



# Dr. KAMAKSHI GROUP OF HOSPITALS

LAKSHMI NURSING HOME, PALLAVARAM

PET – CT CENTRE, ADYAR

Dr. KAMAKSHI MEMORIAL MULTSPECIALITY CENTRE